பார்லே

# இப்போது பார்லே பாப்பின்ஸின் ஆனந்தம் தொடரும் பேக்கெட் தீர்ந்து விட்டாலும்



பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பி
பரவசமூட்டும் பரிசுகளைப் பெறுங்கள்.

**இலவசம்** 20 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் குறும்புத்தனமான புதிர் கிட். 10 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் ஃபன் பேட் மற்றும் ஜங்கிள் புக் ஸ்டிக்கர். 4 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் ஜங்கிள் புக் ஸ்டிக்கர்.



* இச்சலுகை இல்லாமலும் பாப்பின்ஸ் கிடைக்கிறது.




இப்போது பழங்களின் புதிய சுவைகளில்

பழரசம் அல்லது பல்ப் கிடையாது.
கூடுதல் நறுமணங்கள் சேர்ந்தது.

முந்துங்கள்

பரிசுகள் குறைவாக உள்ளன

பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை உங்கள் முகவரி மற்றும் தபால் தலை ஒட்டிய கவருடன் அனுப்ப வேண்டிய முகவரி: பாப்பின்ஸ் பாயின்ட், த.பெ. எண். 907, பம்பாய்-400 057.

everest/94/PP/186-tm

# மங்கை

பிப்ரவரி '95

*பொங்கல் சிறப்பிதழ்*



ஆன்மீகப் புதிர் பரிசு ரூ. 1000/-

மற்றும் சமையல் குறிப்புகள், வீட்டுக் குறிப்புகள், சிறுகதைகள்...

விலை ரூ.6/-





# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி


## தொலைக்காட்சியும் சிறார்களும்

சிறுவர் சிறுமியர் தேர்வுகளில் சரியாகப் படித்து விடை அளிக்காது போனால் அவர்கள் தம் பெரும் பாலான நேரத்தைத் தொலைக்காட்சிப் பெட்டிகளின் முன் கழிக்கிறார்கள் என்று கூறிவிடுகிறார்கள். இவர்களை இவ்வாறு தொலைக்காட்சிகளைக் காண எவ்வளவு நேரம் எதைக் காண வேண்டும் எனத் தீர்மானிக்க வேண்டியது அவர்களது பெற்றோர்கள்.

அண்மையில் டில்லியில் கணக்கு எடுத்தபடி 58 சதம் பெற்றோர் தம் குழந்தைகளோடு தொலைக் காட்சிகளைப் பார்க்கிறார்கள் என்றும் 42 சதவீதம் பெற்றோர் தம் அலுவல்களை கவனிக்க, அதே சமயம் அவர்களது குழந்தைகள் மட்டும் தொலைக்காட்சிகளைக் காண்கிறார்கள் என்றும் தெரிய வந்துள்ளது.

குழந்தைகள் இக்காட்சிகளைக் கண்டு அவை போலச் செய்யவும் தொடங்கி விடுகிறார்கள். விளையாட்டுகளை விடத் தொலைக்காட்சிகளையே பார்க்க விரும்புகிறார்கள். தம் நண்பர்களோடு அதிகம் பழகுவதில்லை. இவை எல்லாம் விரும்புத் தகாத மாற்றங்கள்.

இவற்றை எல்லாம் திருத்த சிறார்களுக்கான தனி அலைவரிசையை ஏற்படுத்தி அவர்களுக்குப் பிடித்தமான நிகழ்ச்சிகளை அளிக்க வேண்டும். தற்போது இந்த ஏற்பாடு சில நாடுகளில் வெற்றிகரமாக இயங்கி வருகிறது. நம்நாட்டிலும் இப்படிச் செய்தால் குழந்தைகளின் அறிவும் உடலும் வளர ஏற்றதாக இருக்கும்.





மதிமுகம் : 96 பிப்ரவரி 1995 புன்னகை : 2

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00




செய்திகளும் தகவல்களும் :

# ஹெல்மட் கோலின் வருகை

ஜெர்மனியில் கடந்த நவம்பரில் நடந்த பொதுத் தேர்தலில் சான்சலர் ஹெல்மட் கோல் நான்காவது முறையாக வெற்றிபெற்றார். 1982-ல் அப்போதைய மேற்கு ஜெர்மனியில் நடந்த தேர்தலில் இவர் முதன் முதலாக வெற்றிபெற்று சான்சலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1992-ல் கிழக்கு மேற்கு ஜெர்மனிகள் இணைந்து ஒரே நாடான பின் நடந்த முதலாவது தேர்தலில் மூன்றாவது முறையாக சான்சலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1990-ல் நடந்த தேர்தலில் ஆளும் கட்சிகளுக்குத் தலைமை தாங்கிக் கோல் 55 சத வாக்குகளைப் பெற்றார். ஆனால் இம்முறை இத் தோழமைக் கட்சிகளின் வேட்பாளர்கள் தோற்றுப் போனதால் மிக சொற்பப் பெரும்பான்மை பெற்றே ஆட்சியைப் பிடிக்க முடிந்தது. இவர்களுக்குக் கிடைத்த வாக்குகள் 48.3 சதமே எதிர்க்கட்சிகளுக்கோ 48.1 சதவாக்குகள் கிடைத்தன. இதனால் கோல் நான்கு ஆண்டுகள் முழுமையாகப் பதவியில் இருக்க முடியுமா என்று சிலர் ஐயம் கொண்டுள்ளார்கள் அவர் அவ்வாறு பதவியில் இருந்து விட்டால் முந்தைய சான்சலர் கோர்னாடு அடிநியூர் பதவியிலிருந்த பதிநான்கு ஆண்டுகளையும் இவர் மிஞ்சி விடுவார்.

ஜெர்மன் மக்கள் ஆட்சி மாற்றத்தை அவ்வளவாக விரும்புவதில்லை. எனவே தான் ஹெல்மெட் கோலின் கிரிஸ்டியன் டெமோக்ராடிக் கட்சிக்கு அதன் தோழமைக்கட்சிகளான பவேரியன் கிரிஸ்டியன் பார்ட்டியும் லிபரல்டெமோக்ரட் கட்சியும் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்தன என அரசியல் வட்டாரங்கள் கருதுகின்றன. ஆட்சியில் அமர்ந்தாலும் இம்முறை பெரும்பான்மை அதிகமில்லை என்பது கவனிக்கத் தக்கது.

முக்கிய எதிர்க் கட்சியான 'சோஷல் டெமோக்ரட் கட்சி தான் ஆட்சிக்கு வந்தால் பிற நாடுகளுக்குத் தற்போது உதவி வரும் மினிஸ்ட்ரி ஆப் எகனாமிக் கோ ஆபரேஷன்" என்பதை அகற்றி விடுவதாகத் தன் தேர்தல் அறிக்கையில் அறிவித்திருந்தது. ஜெர்மனியின் உதவியைப் பெற்று வரும் நாடுகளில் நம் நாடும் ஒன்றாகும். இந்த உதவி தொடர கோலின் வெற்றி உதவியுள்ளது.



சான்சலர் ஹெல்மட் கோல் 1990-ல் நம் நாட்டின் ஜவாஹர்லால் நேரு விருது பெற்றதை நாம் ஏற்கனவே அம்புலிமாமா பிப்ரவரி 1992 இதழில் தெரிவித்திருந்தது வாசகர்கள் அறிந்ததே.

# ஏன் நற்சான்று!

வேலவாதேவி லட்சுமணனும் முத்தையாவும் ஊர்ப் பொது மேடையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது கணபதி என்பவன் ஓடிவந்து லட்சுமணனிடம் "ஐயா! பெரிய சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டேன். நீங்கள் தாம் என்னைக் காப்பாற்ற வேண்டும். எனக்கு நூறு ரூபாய் கொடுத்து உதவுங்கள். இரண்டு மாதத்திற்குள் அதனைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்" என்றான்.

லட்சுமணனும் "கணபதி! நீ எனக்குத் தெரிந்தவன்தான். ஆனாலும் பண விஷயம் பார். யாராவது உனக்காக வாக்குறுதி அளித்தால் உனக்குக் கடன் கொடுக்கிறேன்" என்று கூறியவாறே முத்தையாவைப் பார்த்தார்.

முத்தையாவும் "இவனை நம்பி லட்சம் ரூபாய் வேண்டுமானாலும் கொடுக்கலாம். வாக்கு தவறாதவன். நான் சொல்கிறேன். இவனுக்குக் கடன் கொடுங்கள்" எனவே லட்சுமணன் கணபதியைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் நூறு ரூபாய் கொடுத்து அனுப்பினார்.

மறுநாள் முத்தையா லட்சுமணனைச் சந்தித்தபோது "என்ன! அந்த கணபதிக்குப் பணம் கடன் கொடுத்து விட்டீர்கள் போலிருக்கிறது. இனிமேல் உங்கள் பணம் எங்கே வரப் போகிறது!" என்றான். அது கேட்டு லட்சுமணன் "பின் நேற்று அவன் நேர்மையானவன் என்று என் முன் ஏன் கூறினீர்கள்?" என்று கோபத்தோடு கேட்டார்.

முத்தையாவும் சிரித்துக் கொண்டே "இந்த கணபதி இரண்டு வருடங்களுக்கு முன் என்னிடம் இருபது ரூபாய் கடன் வாங்கிக் கொண்டான். ஆனால் நேற்று வரை திருப்பிக் கொடுக்கவில்லை. நேற்று அவன் கடன் கேட்டபோது நான் உங்களைக் கொடுக்கச் சொல்லி அவன் உங்கள் வீட்டை விட்டுப் பணத்தோடு வந்தபோது என் கடனை வசூலித்து விட்டேன்" என்றான். லட்சுமணன் சிலை போலானார்.






# அது ஏன்?

கற்பூரபுரியில் கேசவன் என்ற இளைஞன் இருந்தான். அவன் பல காவியங்களையும் நூல்களையும் படித்தவன். அதனால் ஊரார் அவனைப் பெரும் பண்டிதர் என்று கருதினார்கள். இதனால் அவன் மனதில் தன்னைவிடப் படித்தவர் யாருமே இல்லை என்ற எண்ணம் தோன்றிவிடவே அவனுக்குக் கர்வம் வந்து விட்டது.

ஒருமுறை அந்த ஊருக்கு சாந்த சீலன் என்ற சன்னியாசி வந்தார். அக்கிராமத்தவர் அவரை ஊர்வல மாக அழைத்துப் போய் மரியாதை செய்து ஒரு பணக்காரர் வீட்டில் தங்க வைத்தார்கள். அவர் தினமும் பிரசங்கம் செய்து உபதேசிக்கும் அறிவுரைகளை பக்தி சிரத்தையுடன் கேட்டார்கள். அவருக்கு இணையாக அது வரை கண்டதே இல்லை என்றும் அவர்கள் புகழ்ந்தார்கள்.

இதையெல்லாம் கண்டும் கேட்டும் கேசவன் சாந்தசீலர் மீது பொறாமை கொண்டான். அவரது உபதேசங்கள் சர்வசாதாரணமானவை என்றும் தன்னால் அவற்றைவிட உயர்ந்த உப தேசமொழிகளைக்கூற முடியும் எனவும் அவன் எண்ணினான். ஆனால் ஊரார் என்னவோ அவரைத்தான் பாராட்டுகிறார்களே இது என்ன முட்டாள்தனம் என்று எண்ணி மனம் புழுங்கினான்.

ஒருநாள் அவன் சாந்தசீலரைக் கண்டு "ஐயனே! தாங்கள் என்ன என்ன படித்திருக்கிறீர்கள்?" என்று கேட்டான். அவரும் "சிறு வயதில் என் தாய் தந்தையர் எனக்குக் கல்வி புகட்ட எவ்வளவோ முயன்றனர். ஆனால் எனக்குப் படிப்பு ஏற வில்லை. நான் அதிகம் படிக்க வில்லை" என்றார். அப்போது கேச வன் "அப்படியானால் இந்த உப

-சிவனார் செல்வன்-



தேசங்களை எல்லாம் எப்படிக் கூறுகிறீர்கள்?" என்று கேட்டான்.

சாந்தசீலர் புன்னகை புரிந்தவாறே "புத்தகங்களில் எல்லாமே இருக்காது. அனுபவ ரீதியாகத்தான் ஒருவன் பலவற்றைக் கற்கிறான். இப்படி நான் அறிந்ததை மக்களுக்குக் கூறுகிறேன்" என்றார். கேசவனோ "சிலர் தம் அனுபவங்களைப் புத்தக வடிவில் கொடுத்திருக்கிறார்கள். அவற்றில் நீங்கள் கூறுபவை எல்லாம் உள்ளன. அதற்கு மேலும் உள்ளன. அவற்றைப் படிப்பது மேலா அல்லது உங்களது உபதேசங்களைக் கேட்பது மேலா?" என்று அவரிடம் கேலியாகக் கேட்டான்.

சாந்தசீலரும் "அவற்றைப் படிப்பதே மேல்" எனவே கேசவனும் "நான் அவற்றை எல்லாம் படித்துப் புரிந்து கொண்டவன்" என்று கர்வப் பட்டுக் கொண்டு கூறினான். "ஆகா! நீ அதிர்ஷ்டசாலியே!" என்றார் சாந்த சீலர்.

கேசவனோ "நானா அதிர்ஷ்ட சாலி? இல்லை. நீங்கள்தான். உங்களை விட நான் அதிகம் படித்திருந்தும் இந்த ஊரார் என்னை மதிக்காமல் உங்களைத்தானே மதித்துப் புகழ்கிறார்கள்!" என்றான். சாந்த சீலரும் "நான் என் உபதேசங்களைக் கேட்கும்படி யாரையும் வற்புறுத்த வில்லை. என்னை கௌரவிக்கும்படி யாரிடமும் வேண்டவில்லை. மக்கள் அப்படிச் செய்கிறார்கள். அது கூட எனக்குப் பிடிக்கவில்லைதான்" என்றார்.

கேசவனும் "நான் உங்களை விட அதிகம் படித்தவன். இந்த ஊரார் உங்களைவிட என்னை அதிகம் மதிக்க வேண்டும் என்றால் நான் உங்களை வாதத்தில் தோற்கடிக்க வேண்டும். அதற்கு நீங்கள் தயாரா?" என்று கேட்டான்.

சாந்தசீலரும் "நான் உன்னைப் போலப் படித்திராவிட்டாலும் உன்னைப் பற்றி ஒன்று தெரிந்து கொண்டிருக்கிறேன். நீ படித்ததை வாழ்க்கையில் கடைப்பிடிக்கவில்லை என்பதே அது. நீ ஒரு குருவிடம் கொஞ்சகாலம் இருந்தால் சரியாகி விடுவாய்" என்றார். அதுகேட்டு



அங்கிருந்த சிலர் கேசவனைப் பார்த்துக் கேலியாகச் சிரித்தார்கள்.

கேசவன் கோபம் கொண்டு "ஐயா! நீங்கள் பல இடங்களுக்குச் சென்று வந்திருக்கிறீர்களே. என் குருவாக இருக்கத் தகுதிப் பெற்றவர் யாராவது இருக்கிறாரா?" என்று கேட்டான். சாந்தசீலரும் "ஆம். இருக்கிறார். வாணிதாசர் என்பது அவர் பெயர். அவர் மாபெரும் பண்டிதர். கவிஞரும் கூட. அவர் தாம் எழுதியவற்றை ஊர் ஊராக எடுத்துப் போய்ப் படித்துக் காட்டுகிறார். இப்படிச் செய்வது அவர் தம் படைப்புகளில் ஏதாவது குற்றம் குறையை யாராவது சுட்டிக் காட்டுகிறாரா என்று காணத்தான். ஆனால் இதுவரை யாரும் அவரது நூல்களில் ஒருதப்பிதம் இருப்பதாகக் கூட கூறவில்லை. என்றாவது அவர் இந்த ஊருக்கும் வரக்கூடும் நீ அவரைக் கண்டு பேசிப் பார்" என்றார்.

அப்போது முதல் கேசவன் என்று தன் ஊருக்கு வாணிதாசர் வருவார் என்று எதிர்பார்க்கலானான். ஒரு நாள் வாணிதாசரும் தம் மனைவி மக்களுடன் அந்த ஊருக்கு வந்தார். கிராமப் பிரமுகர் ஒருவர் அவர் தங்க வசதி செய்து கொடுத்தார். அவரது காவியங்களைப் படித்துக் காட்ட ஏற்பாடும் செய்தார்.

வாணிதாசர் தமது புதிய படைப்பை அவ்வூராருக்குப் படித்துக் காட்டினார். அது ஒரு சன்னியாசியின் கதை. படிப்பு ஏறாமலும் வேலை எதுவும் செய்யாமலும் இருந்த நாணு என்பவன் சன்னியாசியாகிறான். எந்த நூலையும் படிக்காத அவன் நாளாவட்டத்தில் பேரறிஞனாகி மக்கள் மதிப்பைப் பெறுகிறான். இதுதான் அக்கதை.

வாணிதாசர் அதனை மிக நன்றாக சொற்கட்டுடன் எழுதி இருந்தார். அதைக் கேட்டு அவ்வூரார் அவரைப் பாராட்டினார்கள். அப்போது கேசவன் எழுந்து நின்று "தங்களது இந்தப் படைப்பால் விபரீதம் நிகழும். படிப்பில்லாமல் வேலை எதுவும் செய்யாமலிருந்த ஒருவன் சன்னியாசியாகி எல்லோர் பாராட்டையும் பெறுவதாக நீங்கள் கூறியுள்ளதால் படிக்



களை உற்பத்தி செய்கின்றனவா?" என்று கேட்டார். அப்போது கேசவன் "அப்படியானால் மிருகம் போலத் தான் மனிதன் வாழ வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களா?" என்று கேட்டான்.

வாணிதாசர் அவனை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்து விட்டு "மனிதன் சமூக அமைப்பில் வாழ்பவன். விரும்பினாலும் அவனால் மிருகமாகி விட முடியாது. அதுபோல எளிதில் சன்னியாசியாகவும் ஆகிவிட முடியாது. எனவே உனக்கு உணவு, உடை, வீடு என்ற தட்டுப்பாடு ஏற்படாது. கவலைப்படாதே" என்றார். அது கேட்டு எல்லோரும் சிரிக்கவே கேசவன் முகம் அவமானத்தால் சிறுத்தது.

காமலும் வேலை எதுவும் செய்யாமலும் இருந்தால் எவனும் எல்லோர் மதிப்பையும் பெற்றுவிடலாம் என்று தவறான எண்ணத்தை எல்லோர் மனதிலும் ஏற்படுத்திவிடும் அதனால் சன்னியாசிகள் அதிகமாகி விடுவார்கள். உழைப்பவர்கள் குறைந்து போய் உணவு தானியங்கள் உற்பத்தி குறையும். வேலைக்கு யாரும் வரா விட்டால் வீடுகள் கட்ட முடியாது. உடுத்திக் கொள்ளத் துணி கூடக் கிடைக்காமல் போய்விடும்" என்றான்.

அது கேட்டு வாணிதாசர் சிரித்தவாறே "மனிதனும் ஒரு மிருகமே. மிருகங்கள் வீடு கட்டிக் கொள்கின்றனவா? ஆடைகள் நெய்து அணிந்து கொள்கின்றனவா? உணவு தானியங்

அப்போதும் கேசவன் "நீங்கள் உறுதியாக நம்புவதைச் செயலில் காட்ட வேண்டும். காவியம் புகழ் பெறுவது சன்னியாசியாகி விடுவதால் தான் என்பதா உங்கள் கருத்து?" என்று கேட்டான். வாணிதாசரும் "சன்னியாசம் வாங்கிக் கொள்வது என்பது மனைவி மக்களை விட்டுப் பிரிந்து செல்வதல்ல அகங்காரத்தையும் சுயநலத்தையும் விட்டொழித்துப் பேருக்கும் புகழுக்கும் ஆசைப்படாமல் இருப்பவனே சன்னியாசி. இதைத்தான் நான் கடைப்பிடித்து வருகிறேன்" என்றார்.

கேசவனும் "உங்களுக்குப் புகழ் தேவை இல்லை என்றால் ஏன் புதி

தாகக் காவியம் படைக்கிறீர்கள்? இது புகழ் அடைய வழிதானே? அப்படியானால் சுயநலம் கருதித் தானே இப்படிச் செயல்படுகிறீர்கள்? பலர் நல்ல காவியங்களை எழுதி யுள்ளார்கள். அவை போதுமே. அவற்றை நீங்களே பரப்பலாமே. நீங்கள் உங்கள் படைப்புகளுக்குப் புகழ் வரவேண்டும் என்று தானே இப்படி ஊர் ஊராகப் போய் வரு கிறீர்கள்?" என்று கேட்டான்.



வாணிதாசரும் "என் படைப்பை இது என் காவியம் எனக் கூறி விட்டால் அது பொய்யாகிவிடும். என் காவியத்தை வேறு யாரோ எழுதியதாக மக்கள் நினைத்து விட் டால் நானே பொய்க்கு இடம் கொடுத் தது போலாகி விடும். இதனால் பணம் கிடைக்க ஆசைப்படவில்லை. நான் செல்லும் இடங்களுக்கு எல் லாம் என் குடும்பத்தையும் அழைத் துச் செல்கிறேன். இது சுயநலமல்ல. புகழ்பெற அல்ல. இதில் இவ்வளவு சிரமப்படுகிறேன் என்றால். நான் எழுதியதைப் பிறருக்கு விளக்கத் தான்" என்று கூறி மேலும் தொடர்ந் தார்.

"மனிதன் முதலில் பிறந்த போது ஆடை அணியவில்லை. கொஞ்ச காலத்திற்கு இலைகளால் தன் உடலை மறைத்தான். பல நூற் றாண்டுகளுக்குப் பின் மரவுரிகளை அணிந்தான். இப்போதோ பஞ்சி லிருந்து நூல் நூற்று ஆடைகள் நெய்து அணிந்து வருகிறான். இப் படி நல்ல மாற்றம் ஏற்படுவது போலத்தான் இலக்கியத் துறையிலும் ஏற்பட்டு வருகிறது எண்ணங்களின் மாற்றங்கள் இலக்கியப் படைப்பு களில் தோன்றுகின்றன. புதிய கவிஞர் கள் தோன்றுகிறார்கள். புதிய காவியங்கள் படைக்கப்படுகின்றன. இவற்றையெல்லாம் அறிய நீ நிறையப் படிக்க வேண்டும். காலம் மாறுகிறது. காலத்திற்கு ஏற்ப எண் ணங்களும் காவியங்களும் மாறு கின்றன. இவற்றை யாராலும் தடுக்கவோ தவிர்க்கவோ முடி யாது"

இதைக் கேட்டுக் கொண்டிருந்த கேசவன் கற்சிலை போலானான்.

இதையெல்லாம் அவன் நினைத்துக் கூடப் பார்த்ததில்லை. ஆனாலும் வாணிதாசரை மட்டம் தட்ட வேண்டும் என்ற எண்ணமே அவன் மனதில் மேலோங்கியது.

அவன் உடனே "அது சரி, இந்தக் காவியப் படைப்பிற்கு மனைவி மக்கள் எல்லாம் ஏன் கூட வர வேண்டும்?" என்று ஏளனமாகக் கேட்டான். வாணிதாசரும் "என் படைப்புகளில் எல்லாம் என் மனைவி உதவுகிறாள். எனவே நான் புதுக்காவியத்தை என் காவியம் என்று கூறுவதில்லை. எங்களது கூட்டு முயற்சியால் அது படைக்கப் படுகிறது. நான் மெத்தப் படித்தவன், எல்லாம் தெரிந்தவன் என்று உன் போலக் கர்வம் கொண்டு கூறுவது இல்லை. என் படைப்பு வாணிதாசனுடையது என்றால் அதில் என் மனைவியின் பெயரான வாணி முதலிலும் அடுத்து ராமதாசன் என்ற என் பெயரில் கடைசிப் பாதியான தாசன் என்பது அடுத்தும் வருகிறது. எனவே இதில் நான் மட்டும் புகழ் பெறுவதா? அதனால்தான் என் மனைவியையும் நான் செல்லும் இடங்களுக்கு எல்லாம் அழைத்துச் செல்கிறேன்" என்றார்.

அது கேட்டுக் கேசவன் அவரது கால்களில் விழுந்து வணங்கி "என்னை மன்னியுங்கள். எனக்குத் தான் எவ்வளவு சின்னப்புத்தி! பொறாமைப்பட்டு உங்களை அவமானப்படுத்த என்னென்னவோ பேசிவிட்டேன்! ஆனால் அவை எல்லாம் என் மீதே திரும்பி விட்டது. ஊராரின் கேலிக்கும் ஆளாகி விட்டேன். பிறருக்கு மரியாதை கொடுக்க வேண்டும் என்ற முதல் பாடத்தைத் தங்களிடம் இப்போது கற்றுக் கொண்டேன். இனிமேல் நீங்கள்தான் என் குருநாதர்" என உள்ளம் உருகி வேண்டினான்.

வாணிதாசரும் அவனைத் தம் சீடனாக ஏற்றார். நாளடைவில் கேசவன் திருந்தி விட்டான். அவனது அகம்பாவம் அழிந்தது.






## 4

*(மோகன் கவர்ந்து சென்ற புவனசுந்தரியை சமாதான வழியில் கிரேக்கர்கள் மீட்க முயற்சி செய்தது பலிக்கவில்லை. புவன சுந்தரியின் கணவன் பிரதாபன் ட்ராய் மீது படைஎடுத்துச் செல்லத் தனக்கு உதவுமாறு மற்ற கிரேக்க மன்னர்களிடம் கேட்டான். அவர்களும் உதவிக்கு வரவே கிரேக்கப் படை கப்பலில் பயணமாகியது. ரூபதரனும் வச்சிரகாயனும் அப்படையெடுப்பில் கலந்து கொள்ளாமலிருக்க முயன்றும் முடியவில்லை. அவர்களையும் அழைத்துக் கொண்டு கிரேக்கப் படை முடிவில் ட்ராய் கடற்கரையை அடைந்தது. பிறகு-)*

ட்ராய் கடற்கரையில் கப்பலிலிருந்து முதலில் குதித்தவன் சந்திரப்பிரபன். அடுத்து வச்சிரகாயன் குதித்து இறங்கினான். இவர்களின் பின் கிரேக்கப் படை இறங்கிச் சென்றது. ட்ரோஜன் வீரர்களில் மராளன் என்பவன் ஒருவன். அவனை ஈட்டியாலோ அல்லது வாளாலோ கொல்ல முடியாது. அவன் முதல் நாளில் கிரேக்கப் படையை எதிர்த்துப் போராடியதோடு நில்லாமல் பல கிரேக்க வீரர்களைக் கொன்றான்.

வச்சிரகாயன் இந்த மராளனை எதிர்த்துச் சண்டையிட்டான். அவனால் எளிதில் மராளனைக் கொல்ல முடியவில்லை. அவனைத் தள்ளிக் கீழே விழச் செய்து வச்சிரகாயன் அவன் மார்பின் மீது அமர்ந்து அவன் கழுத்தைப் பிடித்து அமுக்கிக் கொன்றான்.



றாள். அவர்களில் மூத்தவன் வீரசிம்மன். இலியடன் என்பவனும் இன்னொரு மகனாவான். இலியடனுக்கு இருபது வயதாகி விட்டால் ட்ராய் நகரை யாராலும் வெல்ல முடியாது என ஆரூடம் கூறப்பட்டிருந்தது.

இதை அறிந்த வச்சிரகாயன் இலியடனை எப்படியாவது ஒழித்து விடுவது என்று தீர்மானித்தான். ஒருநாள் இலியடன் ஒரு ஆலயத்தின் சுற்றுப் பிரகாரத்தில் குதிரைகளைப் பழக்கிக் கொண்டிருந்தான். அப்போது வச்சிரகாயன் அங்கு சென்று இலியடனை ஈட்டியால் குத்திக் கொன்றான். இலியடனின் மரணத்தால் ட்ராய் நகரமே துயரக் கடலில் மூழ்கியது.

மராளன் இறந்ததும் ட்ராய் படைகள் பயந்து சிதறிப் பின் வாங்கி ட்ராய் நகருக்குள் ஓடி விட்டன. கிரேக்கர்கள் தம் கப்பல்களைப் பத்திரமான இடங்களில் நிறுத்தி வைத்தார்கள். ட்ராய் நகரக் கோட்டை மதிலுக்கு வெளியே நின்று கிரேக்கப் படைகள் முற்றுகையிட்டன. ஒன்பது ஆண்டுகள் கழிந்தும் குறிப்பிடத்தக்க விதத்தில் எந்தப் போரும் நிகழவில்லை. ஆனால் பல சம்பவங்கள் மட்டும் நிகழ்ந்தன.

ட்ராய் மன்னனான வர்த்தனனின் மனைவிகள் இருவர். மோகனின் தாய் அவர்களில் இளையவள். மன்னனுக்குப் பிறந்த ஐம்பது குழந்தைகளில் பத்தொன்பதை அவள் பெற்

வர்த்தனின் புதல்வர்களில் விருகாட்சன் என்பவனும் ஒருவன். அவன் மரங்களை அறுத்து தேர்களுக்கு வேண்டிய சட்டங்களைச் செய்து கொண்டிருந்தான். வச்சிரகாயன் ஒருநாளிரவு யாருக்கும் தெரியாமல் ட்ராய் நகருக்குள் நுழைந்து விருகாட்சன் வேலை செய்து கொண்டிருந்த தோட்டத்திற்குள் நுழைந்து அவனைப் பிடித்துத் தன் கூடாரத்திற்குக் கொண்டு சென்றான்.

கைதியாகக் கொண்டு வரப்பட்ட அவனை என்ன செய்வது என்று கிரேக்கப் படைத் தலைவர்கள் யோசித்து முடிவில் ஒரு நாள் தம் அடிமையாக வேலை வாங்கினார்கள். யாரோ ஒருவன் இரக்கப்பட்டுப்

பணம் கொடுத்து விடுவித்தான். ஆனால் அவன் ட்ராய் நகருக்குப் போகும் போது வழியில் வச்சிர காயன் அவனைத் தாக்கிக் கொன் றான்.

வச்சிரகாயன் இது போன்ற பல வேலைகளைச் செய்து வந்தான். ஒரு சிறு படையுடன் ட்ராய் நகருக்குள் சென்று கொள்ளை அடித்தான். அவர்கள் ஜடாமலை உச்சியை அடைந்தபோது அங்கு பிரசம்சன் என்பவன் இருந்தான். அவன் மோக னின் பங்காளி. மோகன் புவன சுந்தரியைக் கவர்ந்து வர ஸ்பார்டா வுக்குச் சென்ற போது அவனும் சென்று மோகனுக்கு உதவி செய் தான். ஆயினும் கிரேக்கர்களுக்கும் ட்ராயுக்கும் போர் மூண்டபோது அவன் நடுநிலை வகித்தான். அவ னது ஆட்களும் அப்போரில் கலந்து கொள்ளவில்லை.

பிரசம்சன் தன் மாடுகளை மேய்ப் பவர்களோடு ஜடா மலையில் இருந்த போது வச்சிரகாயன் தன் படை யோடு அங்கு சென்றான். அவன் பிரசம்சனைத் தாக்கவே அதைச் சமாளிக்க முடியாமல் பிரசம்சன் அங்கிருந்து ஓடி விட்டான். கிரேக்கப் படை மாடு மேய்ப்பவர்களைக் கொன்று மாடுகளைத் தன் வசப்படுத் திக் கொண்டது.

இதனால் பிரசம்சனால் நடுநிலை யில் இருக்க முடியவில்லை. அவன் தன் படைகளோடு ட்ராய் நகருக்குப் போய் அங்குள்ள படைகளோடு சேர்ந்தான். பிரசம்சன் பெரும் வீரன்.






வச்சிரகாயன் கூட அவனை உயர் வாகக் கருதி வந்தான். ட்ராய் வீரர் களோ தமக்கு நல்லதொரு பக்க பலம் கிடைத்ததாக எண்ணி மகிழ்ந்து போயினர். அவன் அப்போரில் இறக்க மாட்டான் என்றும் அவனது வம்சத்தவர் தொடர்ந்து ட்ராயின் மன்னர்களாவார்கள் என்று ஆரூடம் வேறு கூறப்பட்டிருந்தது.

ட்ராயுடன் நட்புறவு பூண்டபோது பல நகரங்களும் இருந்தன. அவற் றில் பலவற்றை வச்சிரகாயன் தாக் கித் தன் வசப்படுத்திக் கொண்டான். அவ்வாறு கைப்பற்றப்பட்ட ஒரு நகர மன்னன் வீரசிம்மனின் மாம னார். கிரேக்கர்களுடன் நடந்த போரில் அவனும் அவனது ஏழு மகன்களும் மடிந்து போயினர்.

கிரேக்க முகாமிலும் பல பயங்கர சம்பவங்கள் நிகழ்ந்தன. ஒருமுறை ராஜராஜன் ரூபதரனிடம் "நீ திரெசிற் குப் போய் கப்பலில் உணவு தானியம் ஏற்றிக் கொண்டு வா" என்று கூறி னான். ஆனால் ரூபதரன் கப்பலில் போய்விட்டு எதுவுமே கொண்டு வராமல் திரும்பி வந்தான்.

அது கண்டு கிரேக்க வீரர்களில் ஒருவனான பிரபோதன் என்பவன் ரூபதரனை "சோம்பேறி, உதவாக் கரை, கையாலாகாதவன் என்றெல் லாம் திட்டினான். ரூபதரனோ "நான் என்ன செய்வேன்? எங்கும் உணவு தானியமே இல்லை. ஒரு வேளை நீ போயிருந்தால் உனக்குக் கிடைத் திருக்கலாம்" என்றான். அதுகேட்டு ரோஷம் கொண்ட பிரபோதன் "நான் போய் உணவு தானியம் கொண்டு வருகிறேன் பார்" என்று கூறிக் கப் பல் ஏறிச் சென்றான். அவன் ஒரு கப்பல் நிறைய தானியம் கொண்டு வரவே ரூபதரன் தலை குனிந்து கொண்டான். அவனுக்குப் பிரபோ தன் மீது கோபம் வந்தது. அவனை எப்படிப் பழி வாங்குவது என்று ரூபதரன் யோசித்துப் பார்த்தான். முடிவில் அவன் ஒரு வழியையும் வகுத்தான்.

ஒருநாள் அவன் ராஜராஜனிடம் "நேற்றிரவு கனவில் ஒரு தேவதை தோன்றி நம் கூடாரத்தில் ஒரு துரோகி இருப்பதாகக் கூறி எச்ச

ரித்தது. அவனால் ஆபத்து வருவதைத் தவிர்க்க நாம் நம் முகாமை நாளை ஒருநாள் மட்டும் மாற்றி விட வேண்டும்" என்றான். அது கேட்டு ராஜராஜனும் உடனே முகாமை மாற்றினான். கிரேக்க வீரர்கள் அனைவரும் வேறு இடத்திற்குப் போய் ஒரு பகல், ஒரு இரவைக் கழித்தார்கள்.

எல்லோரும் முகாமை விட்டுப் போனதும் ரூபகரன் யார் கண்ணிலும் படாமல் பிரபோதனின் கூடாரத்திற்குள் சென்று ஓரிடத்தில் தங்க நாணயங்கள் நிறைந்த ஒரு பையை ஒளித்து வைத்தான். பிறகு ஒரு போர்க்கைதியை நிர்பந்தப்படுத்தி ஒரு கடிதம் எழுதி வைத்தான் அது வர்த்தகன் பிரபோதனுக்கு எழுதியது போல அமைக்கப்பட்டது. "கிரேக்கர்களைக் காட்டிக் கொடுக்க நீ கேட்ட தொகையை நான் அனுப்பி இருக்கிறேன்" என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

ரூபதரன் அந்தக் கைதியிடம் "நீ இப்போதே போய் இக்கடிதத்தைப் பிரபோதனிடம் கொடுத்துவிடு" எனக் கூறி அனுப்பினான். ஆனால் ரூபதரன் அக்கைதியை நடுவழியில் தன் ஆட்களை வைத்துக் கொன்று விட்டான். மறுநாள் கிரேக்க வீரர்கள் தம் முந்தைய முகாமிற்கு திரும்பி வந்தார்கள். வழியில் அவர்கள் ஒரு போர்க் கைதி இறந்து கிடப்பதைக் கண்டு அவனது உடலைப் புரட்டிப்



பார்த்தனர். அப்போது அவனிடமிருந்து கடிதம் அவர்களுக்குக் கிடைத்தது.

அக்கடிதம் ராஜராஜனிடம் சேர்ப்பிக்கப்பட்டது. அதைப் படித்து விட்டு அவன் பிரபோதனை அழைத்து விசாரித்தான் பிரபோதனோ தனக்கும் வர்த்தனனுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்றும் தான் தங்க நாணயங்களை யாரிடமிருந்தும் பெறவில்லை என்றும் கூறினான்.

ரூபதரன் அப்போது "இவனது கூடாரத்தைச் சோதனையிட்டால் உண்மை தெரிந்து விடும்" என்றான். பிரபோதனின் கூடாரம் சோதனை போடப்படவே தங்க நாணயப் பை அகப்பட்டது. பிரபோதன் துரோகி

என அறிவிக்கப்படவே கிரேக்க சட்டப்படி கிரேக்க வீரர்கள் அவனைக் கற்களால் அடித்துக் கொன்று விட்டார்கள்.

சாகுமுன் பிரமோதன் "ஐயோ உண்மை தேவதையே! இவர்கள் என்னைக் கொல்லவில்லை. உன்னைத்தான் கொல்கிறார்கள்" என்று கத்திக் கொண்டே இறந்தான். பிரமோதனின் மரணம் கிரேக்கர்களுக்குப் பெரிய இழப்பே. அவனுக்கு விதிக்கப்பட்ட தண்டனை அநியாயமானது. அவன் மாவீரன். கிரேக்கர்கள் ட்ராய் நகர முற்றுகையின்போது சதுரங்கம் விளையாடக் காய்களை அவன் செய்து கொடுத்தவன் அவன் திராசையும், குத்து விளக்கையும் முதன் முதலில் கிரேக்கர்களுக்குச் செய்து கொடுத்தவன். இவ்வாறு பலவற்றை பிரபோதன் கிரேக்கர்களுக்கு அளித்திருந்தான்.

பிரபோதனின் தந்தை தன் மகன் இறந்ததை அறிந்து ட்ராய் நதருக்கு வந்தான். அவன் ராஜராஜனிடம் "என் மகன் துரோகி என்று எப்படித் தீர்மானித்தீர்கள்?" என்று கேட்டான். அவன் விளக்கம் அளிக்க மறுத்தான். ஆனால் அவனுக்கு பிரபோதன் இறக்க ரூபதரன் செய்த சதியே என்பது நன்கு தெரிந்து விட்டது.

பிரபோதனின் தந்தை தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றான். அவன் கிரேக்க விரர்களின் மனைவிகளிடம் "உங்கள் கணவன்மார்கள் ட்ராய் நகரில் பெண்களை மணந்து கொண்டு விட்டார்கள். அவர்கள் தம் புது மனைவிகளோடு இங்கு வந்தால் உங்கள் கதி என்ன?" என்று கேட்டான். இது முழுப் பொய்யே, ஆனால் இதைக் கேட்ட பல பெண்கள் பதறிப் போனார்கள். தம் கணவன்மார்கள் திரும்பி வந்தால் இனித் தம்முடன் அன்பாக நடந்து கொள்ள மாட்டார்கள் என்று எண்ணி மனம் உடைந்து போயினர். எனவே அவர்கள் தற்கொலை செய்து கொண்டு உயிர் நீத்தனர்.



# அவன் செய்த தவறு

சபாரத்தினம் மூன்றடுக்கு மாடி கட்டி அதில் சுகமாக வாழ்ந்து வந்தான். ஒருநாள் அவன் மாடியிலிருந்து கீழே விழுந்து கால் முறிந்து கட்டுப்போட்டுக் கொண்டு படுத்திருக்கிறான் என அவனது நண்பன் சோமு கேள்விப்பட்டு அவனைப் பார்க்க வந்தான்.

சோமு தன் நண்பனிடம் "இது எப்படி ஏற்பட்டது?" என்று கேட்கவே சபாரத்தினமும் "நான் மொட்டை மாடியில் கைப்பிடிச்சுவர் பக்கம் கட்டிலைப் போட்டுப் படுத்துத் தூங்குவேன். தூங்குவதற்கு முன் கைப்பிடி சுவர் மீது உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொள்வேன். சற்று நேரத்திற்குப் பின் வெற்றிலையை சுவருக்கு வெளியே துப்பி விட்டு சுவரிலிருந்து கட்டிலின் மீது குதித்துப் படுத்துத் தூங்குவேன். அன்று ஞாபக மறதியாக வெற்றிலையைக் கட்டிலின் மீது துப்பி விட்டு சுவரிலிருந்து வெளியே குதித்து விட்டேன். அதனால்தான் இந்த விபத்து நேர்ந்தது" என்றான்.

சோமுவும் "நல்ல ஞாபக மறதி!" என்று கூறித் தனக்கு வந்த சிரிப்பை சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான்.





# வேடம் எது?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அவ்வுடலைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ அரச போகங்களை விட்டு விட்டு இந்த பயங்கர நள்ளிரவில் ஏன் இப்படி சிரமப்படுகிறாய்? நீ ஏதோ ஒரு கடினமான வேலையை மேற்கொண்டுள்ளதாகத் தெரிகிறது. யாரோ உன்னைப் பேச்சால் மயக்கி இந்த வேலையை உன் தலை மீது சுமத்திவிட்டார் என்றே நினைக்கிறேன். இதற்கு உதாரணமாக சுந்தரசேனன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

சுந்தரசேனன் சுகந்தபுரியின் மன்

**வேதாளம் சொல்லும் கதை**



னன். அவன் ஆட்சியில் கவனம் செலுத்தாமல் சுகபோகங்களில் மூழ்கிக் கிடந்தான். பாடகர்கள், நடன மாதுகள் என்று பலர் எப்போதும் அவனைச் சூழ்ந்திருந்தார்கள். அதனால் பல சமயங்களில் முதலமைச்சர் ஞானவர்மர் அவனைக் காணச் சென்றும் காண முடியவில்லை.

ஒருநாள் ஞானவர்மர் எப்படியோ சுந்தரசேனனைத் தனிமையில் கண்டு பேசிவிட்டார். ஆட்சி சீர்குலைந்து வருகிறது என்றும் நிலைமையைச் சீர்திருத்தா விட்டால் மோசமாகி விடும் எனவும் அவர் எடுத்துக் கூறினார். அதுகேட்டு மன்னன் கோபம் கொண்டு "மந்திரிகளான நீங்களெல்லாம் ஆட்சியில் கவனம் செலுத்தாமல் வேறு என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டான்.

ஞானவர்மரும் "நாங்களெல்லாம் இருந்தாலும் தங்களது மேற்பார்வை நேரடியாக இருந்தால்தான் எல்லாம் சரிவர நடக்கும். தாங்கள் ஒருமுறை மாறுவேடத்தில் நாட்டைச் சுற்றி வந்தால் தங்களுக்கே நிலைமை புரியும்" என்று எடுத்துரைத்தார். மன்னனும் "சரி, இன்றிரவே நாம் இருவரும் மாறுவேடத்தில் நகரைச் சுற்றி வருவோம்" என்றான்.

இருவரும் இரவில் மாறுவேடங்களில் சென்றபோது பல அரசாங்க அதிகாரிகள் சட்ட விரோதச் செயல்கள் புரிவதையும் லஞ்சம் வாங்குவதையும் கண்டனர். மறுநாள் மன்னன் தர்பாரில் அந்த அதிகாரிகளை அழைத்து அவர்களது செயல்கள் பற்றி விளக்கம் கேட்டான். அவர்களோ "நாங்கள் இவ்வாறெல்லாம் செய்பவர்களல்ல. யாரோ தங்களிடம் எங்களைப் பற்றிக் கோள் சொல்லி இருக்கிறார்கள்" என்று கூறித் தப்ப முயன்றனர்.

மன்னனோ "இதுபற்றி யாரும் என்னிடம் கூறவில்லை. நேற்றிரவு நானே நேரில் உங்கள் செயல்களைப் பார்த்தேன். நான் மாறு வேடத்தில் இருந்ததால் என்னை நீங்கள் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை" என்று கூறவே அந்த அதிகாரிகள் நடுங்கி மன்னனின் கால்களில் விழுந்து தம்மை மன்னிக்கு

மாறு வேண்டினார்கள். அது முதல் முறையாதலால் அவர்களை மன்னன் மன்னிப்பதாகக் கூறினான்.

மன்னன் மாறுவேடம் பூண்டு அதிகாரிகளைக் கண்காணிக்கிறான் என்ற விஷயம் எல்லோருக்கும் தெரிந்து போயிற்று. அதனால் சில நாட்கள் வரை அதிகாரிகள் எச்சரிக்கையாக இருந்து நல்லவர்கள் போல நடந்து வந்தார்கள். இதனால் மன்னன் மீண்டும் சுகபோகங்களில் தன் நேரத்தைக் கழிக்கலானான்.

ஞானவர்மர் ஆட்சி பற்றி மறுபடியும் மன்னனுக்கு நினைவுபடுத்தவே அவனும் "நான்தான் மாறுவேடத்தில் போய் அதிகாரிகளிடையே பயத்தை ஏற்படுத்தி விட்டேனே. அவர்கள் தொடர்ந்து அவ்விதம் நடக்கும்படிச் செய்ய வேண்டியது இனி உங்களது பொறுப்பு" என்றான்.

மன்னனிடம் இனிமேல் சொல்லி எவ்விதப் பலனும் காணமுடியாது என்று கண்டுகொண்ட ஞானவர்மர் சற்று யோசித்தார். அப்போது அவருக்குத் தலைநகரை அடுத்த காட்டிலுள்ள யோகானந்தர் என்ற மகா யோகியைப் பற்றிய நினைவு வந்தது.

யோகானந்தர் நூறு வயதை எட்டியவர். அவர் சுகந்தபுரி அரச வம்சத்தில் பிறந்தவரே. அவர் இகலோக சுகங்களை விட்டொழித்து துறவறத்தை மேற்கொண்டவர். அவர் சொல்வதை சுகந்தபுரி மன்னர்கள் வேதவாக்காக மதித்து ஏற்று வந்தனர். அவரை சுகந்தபுரி அரண்மனைக்கு வருமாறு ஞானவர்மர் வேண்டவே அவரும் சுந்தரசேனனைக் காண அரண்மனைக்குச் சென்றார்.



சுந்தரசேனன் யோகானந்தரை பய பக்தியுடன் வரவேற்றான். அவரும் அவனைப் பாராட்டி "அப்பனே! நீ எல்லா நற்குணங்களும் கொண்டவனாகவே தென்படுகிறாய். ஆனால் உன் ஆட்சியில் மக்கள் சுகமாக இருப்பது போலத் தெரியவில்லையே. இது பற்றி யோசித்தாயா?" என்று கேட்டார்.

அதுகேட்டு சுந்தரசேனன் சற்று நடுங்கிப் போனான். ஆயினும் அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு



இதைக் கருத்தில் கொண்டு செயல்படு. ஓராண்டிற்குப் பின் நீ எங்கிருந்தாலும் நான் வந்து உன்னைக் காண்கிறேன்" என்றார்.

சுந்தரசேனனும் அவ்வாறே செய்வதாகக் கூறவே யோகானந்தர் அவனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றார். அப்போது முதல் சுந்தரசேனன் வாரம் ஒருமுறை மாறுவேடத்தில் சென்று மக்களின் கஷ்டநஷ்டங்களை நேரில் கண்டறியலானான். அவன் தான் கண்ட துயர்களை எல்லாம் போக்கி மக்கள் நலனில் கவனம் செலுத்தி வந்தான்.

இப்படியெல்லாம் இருந்தும் அவன் தன் சுகபோகங்களை விட்டு விடவில்லை. பாடகிகள், நடன மாதுகள் புடைசூழ வாரத்தில் ஆறு நாட்களைக் கழித்தான். இப்படியாக ஓராண்டு கழிந்தது. ஒருநாள் திடீரென யோகானந்தர் அரண்மனைக்குள் வந்து விட்டார். அப்போது சுந்தரசேனன் தன் சயன அறையில் பட்டு மெத்தையில் படுத்து இசையையும் நடனத்தையும் ரசித்துக் கொண்டிருந்தான்.

அவன் யோகானந்தரைக் கண்டதும் பரபரப்புடன் எழுந்து வந்து அவரது கால்களில் விழுந்து வணங்கினான். யோகானந்தரோ முகத்தைச் சுளித்தவாறே "இந்த ஓராண்டு காலத்தில் உன் நாட்டில் குறிப்பிடத்தக்க மாறுதல் எதுவும் ஏற்படவில்லையே. நான் கூறியபடி நடந்தாயா?" என்று

"நான்தான் மாறுவேடத்தில் போய் அதிகாரிகளை அவ்வப்போது கண்காணிக்கிறேனே. இதற்கு மேல் என்ன செய்வது என்று எனக்குத் தோன்றவில்லை. நீங்கள் அவர்களது குறைகளைக் கண்டு அவற்றை திருத்த ஏதாவது வழி சொல்கிறீர்களா?" என்று கேட்டான்.

யோகானந்தர் "முடியாது. மன்னன் திறமைமிக்கவனாக இருந்தால் அவனால் எந்த நிலையையும் சமாளிக்க முடியும். நீ மாறுவேடத்தில் திரியும்போது மக்களின் நலனையே உன் முக்கிய நோக்கமாகக் கொள்ள வேண்டும். அதிகாரிகளின் ஊழல்களைக் கண்டுபிடிப்பதை விட மக்கள் நலனைப் பேணுவதே உயர்ந்தது.

கேட்டார்.

சுந்தரசேனனும் "நடந்தேன். மாறு வேடத்தில் நேற்றுக் கூட ஒரு ஏழை யின் வீட்டிற்குப் போயிருந்தேன். அவன் போதிய மருத்துவ உதவி இல்லாமல் திணறிக் கொண்டிருந் தான். அவனுக்கு வைத்திய உதவி கிடைக்க ஏற்பாடு செய்து விட்டு வந்தேன். அச்செலவை நானே ஏற் றேன்" என்றான்.

யோகானந்தரும் "அதுசரி. நீ மாறுவேடத்தில் இருக்கும்போது மக்கள் நலனைத்தான் கவனிக்க வேண்டும் என்று நான் உன்னிடம் சொன்னது நினைவில் இருக்கிறதா? அதன்படி நீ நடப்பதாகத் தெரிய வில்லையே" என்றார். சுந்தர சேனனோ "அதென்ன அப்படிக் கூறுகிறீர்கள்! மாறுவேடத்தில் நான் ஒரு ஏழையின் வீட்டிற்குப் போய் அவனுக்கு எவ்வித செலவும் இல்லா மல் வைத்திய உதவி கிடைக்குமாறு செய்திருக்கிறேனே. இது நீங்கள் கூறியதுபோல நடந்து கொண்டது போலத்தானே!" என்று கேட்டான்.

யோகானந்தரும் "அது எனக்குத் தெரிகிறது. நீ மாறுவேடத்தில் உள்ளது பற்றித்தான் கேட்கிறேன்" எனவே சுந்தரசேனன் ஆச்சரியப் பட்டு "ஆமாம். அன்று மாறுவேடத் தில்தான் இருந்தேன்" என்றான். யோகானந்தரும் "மாறுவேடம் என் றால் நீ எந்த வேடத்தில் இருந்தாய்?" என்று கேட்டார்.



"நான் ஒரு ஏழைக் குடியானவ னின் வேடத்தில் சென்றேன்" என் றான் சுந்தரசேனன். "ஏழைக் குடி யானவன் உன் நாட்டுக் குடிமகன் தானே. அதனால் அவனைப் போல மாறுவேடம் என்று எப்படி ஆகும்?" என்று கேட்டார். சுந்தரசேனனும் "அவ்விதம் நான் வேடம் அணிந்தது மாறுவேடம் இல்லையா!" என்று கேட்டான்.

யோகானந்தர் சிரித்தவாறே "நீ உன் நாட்டில் உள்ளவனைப் போல வேடம் பூண்டால் அது மாறுவேட மாகாது. இன்று குடியானவனாக இருப்பவன் நாளை வணிகனாக லாம். அது வேடமாறுதல் அல்ல. நீ ஏழை குடியானவன் வேடத்தில்

போய் ஒரு ஏழைக் குடியானவன் வைத்திய உதவிக்காகத் துடிப்பதைக் கண்டாய். அவனுக்கு உதவினாய். நீ உன்னை மன்னனாக உண்மையில் நினைத்திருந்தால் வைத்திய உதவிக்காக ஏங்கும் எல்லா ஏழைகளுக்கும் உதவி இருப்பாய். நீ ஒவ்வொரு பிரச்னையையும் தனிப்பட்டவன் என்ற முறையில் பார்க்கிறாய். அப்படியல்லாமல் அப்பிரச்னை நாடு முழுவதுமானது என்று பார்த்தாலே உண்மையான மன்னனாவாய்" எனக் கூறினார்.

சுந்தரசேனன் "என் தவறு எனக்குப் புரிந்தது. இனி பிரச்னைகளைப் பொதுவானவை எனக் கருதித் தீர்வு காண்கிறேன்" என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! சுகபோகத்தில் மூழ்கி இருந்த சுந்தரசேனனிடம் மாறுதல் ஏற்பட்டது நல்லதே. ஆனால் மன்னன் குடியானவன் போல வேடம் அணிந்தால் அது மாறுவேடம்தானே? முற்றிலும் மாறுவேடம் என்றால் மன்னன் ராட்சஸனாகவோ தேவனாகவோ வேடம் போட முடியுமா? யோகானந்தர் கூறியதில் முரண்பாடு உள்ளதே. இந்த சந்தேகத்தைத் தீர்க்க நீ மட்டும் சரியான விளக்கம் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "யோகானந்தர் கூறியது மன்னன் திறமைமிக்கவனாக இருக்க வேண்டும் என்பதே. அதற்காகத்தான் நாட்டில் மன்னன் என்ற வேடம் அணிந்து இருக்கிறான். அந்த மன்னனின் வேடத்திற்கு ஏற்ப எல்லா மக்களின் பொதுக் குறைகளை அறிந்து அவற்றைப் போக்க வேண்டும் என்பதை அவர் சுந்தரசேனனுக்குத் தம் பேச்சுத் திறமையால் அறிவுறுத்தினார். இதில் முரண்பாடு இல்லை" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# புத்தம் புதிதா!

மணலூர் மணியம் மார்க்கபந்து வழக்கம் போல அன்று மாலை அரச மர மேடை மீது அமர்ந்து தம் நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அப்போது ஒருவன் வேகவேகமாக வந்து நிற்கவே அவனைத் தம் சம்மந்தி வீட்டு வேலைக்காரன் என்று மார்க்கபந்து கண்டு கொண்டார்.

அவர் தம் மருமகளைப் பிரசவத்திற்கு அடுத்த ஊரிலுள்ள தம் சம்மந்தி வீட்டிற்கு அனுப்பி இருந்தார். எந்த நிமிடத்தில் குழந்தை பிறந்த நற்செய்தி வரும் என்று அவர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். எனவே அவர் வந்த வேலையாளிடம் "என்ன, நல்ல சேதிதானே கொண்டு வந்திருக்கிறாய்?" என்று கேட்கவே அவனும் "ஆமாம் ஐயா! உங்களுக்குப் பேரன் பிறந்திருக்கிறான். இதைத் தெரிவிக்கத்தான் என்னை உங்கள் சம்மந்திப் பெரியவர் அனுப்பினார்" என்றான்.

மார்க்கபந்து ஒரு ரூபாயை எடுத்து அவனிடம் கொடுத்து "இதை வைத்துக் கொள். நீ வீட்டிற்குப் போய் ஒரு பெரிய கூடையைக் கேட்டு வாங்கி எடுத்துக் கொண்டு 'நாராயண விலாஸ்' பட்சணக் கடைக்கு வா" என்றார்.

வேலையாள் சென்றதும் மார்க்கபந்துவும் எழுந்து நாராயண விலாஸிற்குச் சென்றார். அங்கு அதன் உரிமையாளன் நாராயணனே இருந்தான். அவன் மார்க்கபந்துவைக் கண்டதும் எழுந்து "வரவேண்டும். இந்தப் பக்கமே நீங்கள் வெகு நாட்களாக வரவே இல்லை. இன்றுதான் வந்திருக்கிறீர்கள். நான் என்ன செய்ய வேண்டும்? காத்திருக்கிறேன்" என்றான்.

மார்க்கபந்துவும் கண்ணாடி அலமாரியில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த லட்டுவையும் மைசூர்பாகையும்

-எஸ். சுதா-

பார்த்துவிட்டு "இவை எல்லாம் இன்று தயாரிக்கப்பட்டவைதானே. எனக்கு நூறு லட்டும் நூறு மைசூர் பாகும் வேண்டும்" என்றார்.

நாராயணனும் "எல்லாம் சற்று முன் போட்டது. புத்தம்புதுசு. அங்கே சமயலறையில் போட்டதும் இங்கே கொண்டு வந்து வைக்கிறேன். சில நிமிடங்களில் எல்லாம் விற்றுப் போகிறது" என்றான்பெருமையுடன். மார்க்கபந்துவும் "அப்படியா! இவற்றைத் தயாரிக்கவும் இப்படி அழகாக அடுக்கி வைக்கவும் மிகவும் சிரமப் பட்டிருப்பாயே" என்று கேட்டார்.

நாராயணனும் "அதை ஏன் கேட்கிறீர்கள்? இவற்றைத் தயாரிக்க என்னவோ ஐந்து மணி நேரம்தான் பிடிக்கிறது. ஆனால் இந்த மைசூர் பாகை ஒழுங்காகக் கட்டிகளாக சீராக நறுக்கி இந்த மாதிரி அழகாகத் தட்டில் அடுக்கி வைக்க இரண்டு நாள் பிடிக்கிறது. இதுபோல லட்டுவை அடுக்கி வைக்க இரண்டு நாட்கள் பிடிக்கிறது. வியாபாரம் என்றால் இவ்வளவு கஷ்டப்பட வேண்டியுள்ளது பார்த்தீர்களா" என்றான்.

மார்க்கபந்துவும் "ஆமாம். மிகவும் சிரமம்தான்" என்று கூறிப் புன்னகை புரிந்தார். இதற்குள் வேலையாள் பெரிய கூடையை எடுத்துக் கொண்டு வரவே நாராயணன் அவனிடம் "இங்கே கொண்டு வா. லட்டுவையும் மைசூர் பாகையும் அதில் எடுத்து வைக்கிறேன்" என்றான்.

மார்க்கபந்துவோ "வேண்டாம். நீ கூடையை வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போ" என்று கூறவே வேலையாள் போய் விட்டான். அவரும் கிளம்பிப் போய் விட்டார். அப்போதுதான் நாராயணனுக்குத் தான் பேச்சுவாக்கில் லட்டுவையும் மைசூர் பாகையும் பற்றிய உண்மையைக் கூறிவிட்டது நினைவிற்கு வந்தது. அவன் தலையில் அடித்துக் கொண்டு "ஐயோ நல்ல கிராக்கி போய் விட்டதே" என்று புலம்பினான்.



# அம்புலிமாமா அனுபந்தம் – 75



## கொன்னை மரம்

ஒரு இலை கூட இல்லாமல் கிளைகளில் கொத்து கொத்தாய் மலர்களை மிளிரச் செய்வது கொன்னை மரம். இது ஐரோப்பாவின் லேபர்நம் மர வகையைச் சார்ந்தது என்றாலும் இதன் மலர்கள் பெரியவை (30-40 செ.மீ.) பிப்ரவரி மார்ச் மாதங்களில் இம்மரத்தின் இலைகள் உதிர்கின்றன. அதன்பிறகு இதன் கிளைகளில் மலர்கள் பூக்கின்றன. ஏப்ரல்-மே மாதங்களில் இலைகள் மீண்டும் துளிர்கின்றன.

இம்மரங்கள் சாதாரணமாக 1500 மீ உயரத்திற்கு மேலுள்ள இடங்களில் காணக் கிடைக்கின்றன. இவை 12-15 மீ. உயரமே வளர்கின்றன. அடிமரம் சற்றுப் பருமனாயும் கிளைகள் நாலா பக்கத்திலும் பரவியும் வளர்கின்றன. இலைகள் அடர் பச்சை நிறத்தில் 10-12 செ.மீ. நீளம் இருக்கும். 4-5 செ.மீ அகலத்தில் கிளைக்கு இருபுறமும் ஜோடி ஜோடியாக இருக்கும்.

இவற்றின் காய்கள் 60-100 செ.மீ. நீளம். கருப்பு நிறத்தில் ஒரு மரத்தில் சுமார் நூறு காய்கள் காய்க்கும். இவற்றிலுள்ள பல அறைகளில் விதைகள் முட்டை வடிவில் உள்ளன. அறைகளின் உறைகள் சுவைக்க இனிப்பாக இருக்கும். இவற்றை பேதி மருந்துகளில் உபயோகிக்கிறார்கள். இவற்றை குரங்குகள் விரும்பி சாப்பிடுகின்றன.



தாவர இயலில் இதனை கோசியா பீஸ்டுலா என்கிறார்கள். ஹிந்தியிலும் வங்காள மொழியிலும் இதனை அமல்டாசிங் என்றும் மராட்டியில் பாவா என்றும் தமிழிலும், மலையாள மொழியிலும் கொன்னை என்றும் கூறுகிறார்கள். கேரளத்தில் இதன் மலர்கள் விஷுவின்போது பூஜைக்கு உதவுகிறது.

டில்லி, கல்கத்தா, பம்பாய், சென்னை போன்ற மாநகரங்களில் பாதையின் இரு புறங்களிலும் இவற்றை நட்டு அழகுடன் விளங்க வளர்க்கிறார்கள்.

நம் நாட்டு மகாகவிகள்:



# மிகப் பழம்பெரும் நாடகாசிரியர்

ஐயாயிரம் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்ட இராமாயணம், மகாபாரதம் படிக்கப் படிக்க தெவிட்டாதவை. அவற்றின் பல கதைகளை ஆதாரமாகக் கொண்டு நம் நாட்டின் பல மொழிகளில் காவியங்கள் புனையப்பட்டுள்ளன. பல நாடகங்கள் எழுதப்பட்டன. சம்ஸ்கிருத மொழியின் பழம் பெரும் நாடகாசிரியர் பாசர். இவரும் இராமாயண, மகாபாரதக் கதைகளின் அடிப்படையில் பல நாடகங்களை இயற்றியுள்ளார்.

இந்தப் புகழ்பெற்ற நாடகாசிரியர் பாசரின் வாழ்க்கை வரலாறு பற்றிய விவரங்கள் தெரியவில்லை. மகாகவி காளிதாசர் இவரைப் பற்றி உயரிய கருத்துக்களை வெளியிடவே சில நூற்றாண்டுகளாக வரலாற்று வல்லுநர்களும் இலக்கிய மேதைகளும் பாசருக்கு உயரிய மதிப்பை அளித்தார்கள். அவரது படைப்புகளை, குறிப்பாக 'சொப்பன வாசகத்தை' என்ற நாடகத்தைப் பாராட்டிப் பல நூல்கள் குறிப்பிட்டு உள்ளன. இந்த நாடகத்தை கி.பி. 1912க்கு முன் யாரும் படித்ததாகத் தெரியவில்லை.

கணபதி சாஸ்திரி என்பவர் கி.பி. 1912-ல் கேரளத்தில் சில சம்ஸ்கிருத ஓலைச் சுவடிகளைக் கண்டெடுத்தார். அவற்றில் சொப்பன வாசவதத்தையோடு மேலும் பனிரெண்டு நாடகங்கள் இருந்தன. அவற்றின் அமைப்பையும் நடையையும் கொண்டு அவற்றையெல்லாம் எழுதியவர் ஒரே ஆசிரியராகத்தான் இருக்க வேண்டும் என்று பண்டிதர்கள் முடிவுக்கு வந்தார்கள். அது பாசரே என்பது அவர்களது கருத்து.

பாசர் கி.மு. ஐந்தாவது நூற்றாண்டில் இருந்தவர் எனக் கருதப்படுகிறது. அப்போது இணைமொழி சம்ஸ்கிருதமே. அதனால் பாசர் எந்தப் பகுதியில் இருந்தவர் என்பதைக் கூறுவதும் கடினமே. அவரது நாடகங்கள் நாடெங்கும் புகழ்பெற்றவை. முன்பெல்லாம் ஓலைச் சுவடிகளை ஆலயங்களில் பாதுகாப்பாக வைப்பது வழக்கம். வட இந்தியாவில் அன்னியர் படை எடுப்புகளால் ஆலயங்கள் அழிக்கப்பட, அங்கிருந்த ஓலைச்

சுவடிகளும் நாசமாயின. பாசரது படைப்புகளும் இவ்விதமாய் அழிந்திருக்கலாம் எனப் பண்டிதர்கள் கருதுகிறார்கள்.

ஒரு புராணக் கதையை ஆதாரமாகக் கொண்டு படைக்கப்பட்ட 'சொப்பன வாசவதத்தை'யின் கதைச் சுருக்கம் வருமாறு! :

வத்சநாட்டு இளவரசன் உதயணன் மிக அழகியான உஜ்ஜயினி அரசகுமாரி வாசவதத்தையை மணம் புரிந்து கொள்கிறான். அதன்பின் அவன் போக விலாசத்தில் மூழ்கி ஆட்சிப் பொறுப்பையே மறந்து விடுகிறான். இதனால் ஆட்சி சீர்குலைகிறது. வாசவதத்தை மோகத்திலிருந்து மன்னன் உதயணன் விடுபட்டால் நிலைமை திருந்திவிடும் என அமைச்சர் நினைக்கிறார்.

அதனால் அவர் வாசவதத்தை எங்கோ போனபோது தீக்கிரையாகி விட்டாள் என்ற வதந்தியைப் பரப்புகிறார். அது உதயணனுக்கும் எட்டவே அவன் துயரக் கடலில் மூழ்கிவிடுகிறான். சிறிது காலத்திற்குப் பின் அவன் தன் மனதைத் தேற்றிக் கொண்டு ஆட்சியில் கவனம் செலுத்தி தன் நாட்டின் பகுதிகளை ஆக்கிரமித்த எதிரி மன்னனை விரட்டி அப்பகுதிகளை மீட்கிறான். நாட்டில் ஒழுங்குமுறை நிலவி ஆட்சி நன்கு நடைபெறுகிறது.

உதயணன் ஒருநாள் தூங்கிக் கொண்டிருக்கையில் வாசவதத்தை அவனது கனவில் வருகிறாள். அவன் கண்ணைத் திறந்து பார்த்த போது உண்மையிலேயே அவன் எதிரே வாசவதத்தை நிற்கிறாள். தன் கவனத்தை ஆட்சிக்குத் திருப்பவே அமைச்சர் அவ்வாறு வதந்தியைக் கிளப்பி விட்டார் என்பது உதயணனுக்குப் புரிகிறது. உதயணனும் வாசவதத்தையும் மீண்டும் சேர்கின்றனர்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. எவரெஸ்ட் சிகரத்தின் மீது முதலில் யார் எப்போது ஏறினார்?
2. கி.பி. முதலாவது நூற்றாண்டில் நம் நாட்டிற்கு வந்து பலரைக் கிருஸ்துவ மதத்தில் சேர்த்து. இங்கேயே உயிர் நீத்தவர் யார்?
3. நம் நாட்டு உச்சநீதி மன்ற முதலாவது பெண் நீதிபதி யார்?
4. நம் தேசிய மிருகமாகப் புலியை எப்போது அறிவித்தார்கள்?
5. 'டைப்ரைட்டரை' யார் எப்போது கண்டுபிடித்தார்கள்?
6. ஏழு சமுத்திரங்கள் எவை?
7. 'சண்டிகரில் 'ராக் கார்டனை' யார் அமைத்தார்?
8. 1804-ல் நெப்போலியன் பிரஞ்சு சக்கரவர்த்தியான போது பயண வரலாற்றில் நிகழ்ந்த முக்கிய சம்பவம் யாது?
9. சம்பிரதாய விரோதமானவள் எனக் கூறி ஔரங்கசீப் தன் மகளை இருபது ஆண்டுகள் சிறையில் அடைத்து வைத்திருந்தான். அவள் யார்?
10. ரஷ்ட மொழி எந்த எழுத்தால் எழுதப்படுகிறது?

**ஐக்கிய நாடுகள் சபையின் முதலாவது செயலாளர் நார்வேயைச் சார்ந்த ட்ரிக்வி லீ (1946லிருந்து) அவருக்குப் பின் ஸ்வீடனைச் சேர்ந்த டேக் ஹாமர் ஷால்ட் (1953) இவருக்குப் பின் பர்மாவின் ஊதாண்ட் (1961) இவருக்கு அடுத்த ஆஸ்திரியாவின் கர்ட் வால்ட் ஹீம் (1972) அதன் பின் பெருநாட்டின் ஜேவியர் பெராஜ் டி குயூர் 1992லிருந்து எகிப்தைச் சேர்ந்த புட்ரோஸ் காலி)**

## விடைகள்

1. இந்தியாவின் டென்சிங்கும் நியூஜிலாந்தில் எட்மண்ட் ஹிலேரியும் 1953-ல்
2. ஏசுவின் பனிரெண்டு சீடர்களில் ஒருவரான செண்ட் தாமஸ்.
3. கேரளாவின் ஜஸ்டிஸ் பாதிமா பீவி
4. 1972-ல்
5. அமெரிக்காவின் ஷால்ப், கிட்டன், சாலே 1867-ல்
6. பசிபிக், அட்லாண்டிக், ஆர்க்டிக், தென் சமுத்திரம். இந்துமகா சமுத்திரம், அரபிக் கடல், வங்காள விரிகுடா.
7. நேக்சந்த்.
8. ஆர்.ட்ரிவிடிக்கால் கண்டுபிடிக்கப்பட்ட நீராவி ரயில் என்ஜின் வெற்றிகரமாகச் செயல்பட்டது.
9. ஜேபுன்னிசா.
10. க்ரைலிக்.



# நாட்டு நலன் எதில்?

துர்க்காபுரியில் தேவசர்மா என்ற பொருளாதார நிபுணர் இருந்தார். அந்நாட்டு மன்னன் அவரது யோசனைகளைக் கேட்டு நாட்டின் பொருளாதாரக் கொள்கைகளை வகுத்து வந்ததால் நாடு வளமாய்த் திகழ்ந்தது.

துர்க்காபுரியை அடுத்து பார்வதி புரி என்ற நாடு இருந்தது. அந்நாட்டு மன்னனும் துர்க்காபுரி கடைப்பிடித்த பொருளாதாரக் கொள்கைகளைக் கடைப்பற்றி வந்தான். ஆனாலும் அவனது நாடு வளம் பெறவில்லை. தன் கொள்கைகளை அமல்படுத்திய பார்வதிபுரி ஏன் வளம் பெறவில்லை என்பதைக் கண்டறிய தேவசர்மா அந்நாட்டிற்குப் போய்வரத் தீர் மாணித்தார். அங்கு அவரது உற வினர்கள் இருந்ததால் அவர்களைக் காணச் செல்வதாகக் கூறிவிட்டுக் கிளம்பினார்.

இருநாடுகளுக்கிடையே உள்ள காட்டின் வழியே தேவசர்மா சென்று கொண்டிருந்தபோது ஒரு மரத்தின் மீதிருந்து ஒரு பிசாசு அவர் முன் குதித்து நின்றது. அதைக்கண்டு அவர் சற்று பயந்துதான் போனார். அப்போது அப்பிசாசு "பயப்படா தீர்கள். நான் பார்வதிபுரி நாட்டின் பணக்காரர்களில் ஒருவன். நான் கிராமத்தில் வாழ்ந்து வந்ததால் என்னைப் பற்றி மற்றவர்களுக்கு அதிகமாகத் தெரியவில்லை. நான் சம்பாதித்த பணத்தை எல்லாம் ஓரிடத்தில் புதைத்து வைத்திருக் கிறேன். அது என் வீட்டுக்காரர் களுக்குக் கூடத் தெரியாது. அவர் களுக்குச் சாப்பாட்டிற்குக் குறை இல்லாததால் என் புதையலைப் பற்றிக் கவலைப்படவில்லை. நான் அந்தப் பணத்தை யாருக்கும் உப யோகப்படாமல் புதைத்து வைத்த

-எஸ். சுதா-



தால்தான் இப்படிப் பிசாசாகித் திரிகிறேன். அந்தப் பணத்தைப் பய னுள்ள செலவிற்குக் கொடுத்தால் நான் இந்த உருவை விட்டு சொர்க்க லோகம் அடைவேன். தாங்கள் பொருளாதார நிபுணர் தேவசர்மா என்பது எனக்குத் தெரியும். நான் சொர்க்கம் அடையத் தாங்கள் உதவி புரிய வேண்டும்" எனக் கைகூப்பி வேண்டியது.

தேவசர்மாவும் "இதில் யோசிக்க என்ன இருக்கிறது? உன் பணத்தை எல்லாம் இந்நாட்டு அரசனிடம் கொடுத்து விடுகிறேன். அவர் மக்கள் நலனுக்காக அதைச் செலவு செய்ய லாம். பாதைகள் போடலாம். குளங் கள் வெட்டலாம். சத்திரங்கள் கட்ட லாம். இப்படி அவர் அதனைப் பயனுள்ள விதத்தில் செலவிடுவார்" என்றார். பிசாசோ "ஐயா! இந்நாட்டு அரசரிடம் பணத்தைக் கொடுத் தால் அதைத் தன் சுகபோகங்களுக் காகச் செலவிட்டு விடுவார். நீங்கள் சொன்னபடி எல்லாம் அவர் செல விட மாட்டார். அதனால் அவரிடம் கொடுக்க வேண்டாம்" என்றது.

அதுகேட்டு தேவசர்மா "சரி, நாட்டில் பல நற்பணி மன்றங்கள் உள்ளனவே. அவற்றில் சிலவற்றிற் குக் கொடுத்து விடுகிறேன்" என்றார். பிசாசோ "ஐயோ! இந்த நற்பணி மன்றங்கள் சரிவர செயல்படுவ தில்லை. இவற்றிற்குக் கொடுக்கப் படும் பணத்தில் நூற்றில் ஐந்து பங்குதான் உண்மையில் செலவு செய்யப்படுகிறது. எனவே இவற்றிற் குக் கொடுக்கக்கூடாது" என்றது.

பிசாசின் நல்லெண்ணத்தைப் புரிந்து கொண்ட தேவசர்மா "இப்படி யெல்லாம் என் நாட்டில் இல்லை. அங்கு எல்லோரும் எதையும் குறிப் பிட்ட விதத்தில் தம்மிடம் ஒப்படைத்த பணத்தைச் செலவு செய்கிறார்கள். மனசாட்சியை நினைத்து அஞ்சுகிறார் கள். சட்டம், நீதிக்குக் கட்டுப்படு கிறார்கள். இங்கோ அப்படிப்பட்ட வர்கள் இல்லை. இவர்களை விட்டு விட்டுப் பண்டிதர்களிடம் பணத்தைக் கொடுக்கலாமே" என்றார். பிசாசும் "என்நாட்டுப் பண்டிதர்கள் பேராசை பிடித்தவர்கள் அவர்கள் இப்பணத்

தைப் பெற்றால் ஒரு பைசா கூடப் பிறருக்குக் கொடுக்க மாட்டார்கள். அவர்கள் உங்களைப் போல சுய நலமற்றவர்களல்ல" என்றது.

தேவசர்மா அந்தப் பிசாசிற்கு உதவுவது என்று தீர்மானித்துத் தம்மோடு வரச் சொன்னார். அதுவும் யார் கண்ணிலும் படாமல் அவர் பின்னாலேயே சென்றது. அவர்கள் இருவரும் தலைநகரை அடைந்தனர். பிசாசு அங்கேயுள்ள ஒரு தர்ம சத்திரத்திற்கு தேவசர்மாவை அழைத்துப் போய்த் தங்க வைத்தது.



அந்த சத்திரத்தை அவ்வூர் பிரபல வியாபாரி சுவர்ண குப்தன் கட்டினான். அவனைப் போலதான் தர்மங்களும் செய்பவன் இல்லை என்றும் பெயர் பெற்று விட்டான். தேவசர்மா பிசாசிடம் சுவர்ண குப்தனைப் பற்றிய விவரங்களைக் கேட்டார். அதுவும் "இவரது முன்னோர்கள் மலய கிரி என்ற நாட்டைச் சேர்ந்தவர்கள். வியாபாரத்தில் நேர்மைக்கும் நாணயத்திற்கும் பெயர் பெற்றவர்கள். அதனால் தான் இவர்களுக்குப் பல நாடுகளில் வியாபாரக் கடைகள் உள்ளன. சுவர்ண குப்தனின் தம்பி இந்து குப்தனும் பல முறைகளில் இந்நாட்டு மன்னனால் கௌரவிக்கப்பட்டவன். அவன் இந்நாட்டில் இரண்டு கோவில்களையும் எட்டு தர்ம சத்திரங்களையும் கட்டியதோடு ஏராளமான பள்ளிக் கூடங்களையும் நடத்தி வருகிறான். இந்த இரு சகோதரர்களும் மிகவும் நல்லவர்கள்" என்றது.

அப்போது தேவசர்மா "அப்படியானால் உன் பணத்தை இவர்களிடம் கொடுக்கலாம். அதை நல்ல வேலைகளில்தான் செலவு செய்வார்கள்" என்றார். பிசாசும்" இவர்கள் நல்லவர்கள் என்றாலும் அந்த நாட்டைச் சேர்ந்தவர்கள் அல்லவே. அயல் நாட்டவர்கள்தானே. என் பணத்தால் அயல்நாட்டு மனிதர் ஒருவர் பெயரும் புகழும் அடைவதை நான் விரும்பவில்லை. என் பணத்தை என் நாட்டைச் சேர்ந்த ஒருவருக்குக் கொடுத்தாலே எனக்குத் திருப்தி ஏற்படும்" என்றது.

அப்போது ஒரு ஏழை பிராம்



கூறித் தன் வெறுப்பை வெளிப் படுத்தினான்.

தேவசர்மா அந்த பிராம்மணருக்கு ஒரு வராகனைக் கொடுத்து "உன் தேவைகளைப் பூர்த்தி செய்யா தவர்களை நீ சுயநலமிகள் என்று கூறுவது நல்லதல்ல. அயல் நாட்ட வரிடம் உன் நாட்டவரைப் பற்றி இழிவாக நீ கூறினால் அது உன்னை நீயே தாழ்த்திக் கொள்வது போலா கும். இந்த இரண்டு விஷயங்களை நீ நினைவில் கொண்டால் உன் கஷ்டங்கள் எல்லாம் மறைந்து போய் விடும்" என்று அறிவுரை கூறி அனுப் பினார்.

அவர் பிசாசிடம் அந்த ஏழை பிராம்மணனுக்குப் பணம் கொடுத்து உதவலாமே எனக் கூறவே பிசாசும் "அவனுக்குப் பணம் என்னவோ தேவைப்படுகிறதுதான். ஆனால் நான் ஏன் என் பணத்தை இந்த ஊர்க்காரனுக்குக் கொடுக்க வேண் டும்? என் ஊரிலுள்ளவன் எவனுக் காவது கொடுத்தாலே என் மனம் திருப்தி அடையும்" என்றது.

சற்று இளைப்பாறிய பின் தேவ சர்மா பிசாசுடன் அதன் ஊருக்குக் கிளம்பினார். வழியில் அவர் ஒரு அரசாங்க வீரனைக் கண்டார். அவன் மிகவும் சிரம திசையில் இருப்பதும் தெரிந்தது. அவன் பிசாசின் ஊர்க் காரன்தான். அவனுக்குப் பணம் கொடுக்கலாமே என்று அவர் பிசா சிடம் கூறினார்.

மணன் வந்து தேவசர்மாவிடம் "ஐயா! நீங்கள் அயல்நாட்டவர் என்று தெரி கிறது. அதனால்தான் வாய்விட்டு தைரியமாகக் கேட்கிறேன். என் வீடு இடிந்து விழும் நிலையில் உள்ளது. என் தாய் கடும் நோயில் படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள். என் தேவைகளோ பல. ஆனால் எல்லா வற்றையும் நீங்கள் தீர்த்து வைக்க வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாதுதான். உங்களால் முடிந்த உதவியை எனக்குச் செய்யுங்கள். இவ்வூரில் நாற்பது ஆண்டுகளாக நான் இருந்து வந்த போதிலும் எனக்கு உதவி செய்பவர் யாருமே இல்லை. இந்த நாட்டில் உள்ளவர் கள் எல்லோரும் சுயநலமிகள்" என்று

பிசாசோ "என் ஊர்க்காரன் தான் என்றாலும் என் தெருவில் வசிப்பவனாக இருப்பவனுக்குக் கொடுத்தால் எனக்குத் திருப்தியாக இருக்கும்" என்றது. அப்போது தேவசர்மாவுக்குப் பிசாசு தன் வீட்டிலுள்ள ஒருவனுக்கே பணம் கொடுக்க விரும்புகிறது என்பது புரிந்தது. எனவே அவர் "உன் தெருவில் வசிப்பவனை விட உன் வீட்டுக்காரன் ஒருவனுக்கு உன் பணத்தைக் கொடுத்துவிடலாம் எனவே உன் வீட்டிற்கே போகலாம்" என்றார்.

இருவரும் பிசாசின் ஊரை அடைந்து அதன் வீட்டிற்குச் சென்றனர். வீட்டில் எல்லோரும் உட்கார்ந்து சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாகள். அப்போது பிசாசு தேவசர்மாவிடம் "இன்று என் பிறந்தநாள் அதைத்தான் இவர்கள் கொண்டாடுகிறார்கள் போலிருக்கிறது" என்றது.

தேவசர்மாவும் அவ் வீட்டிற்குள் போய் "இறந்து போன இந்த வீட்டுக்காரரின் பிறந்த நாளை விமரிசையாகக் கொண்டாடுகிறீர்களா?" என்று கேட்டார். அப்போது அங்கிருந்த ஒரு விதவையும் இரு மகன்களும் அவர்களது மனைவிகளும் தம் பேச்சை நிறுத்திவிட்டு தேவசர்மாவை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

பிறகு விதவையம்மாள் "அவரது பிறந்த தினமா இன்று? அது எங்களுக்கு ஞாபகமே இல்லை. அவர் உயிராடு இருந்தவரை கட்டுப்பாடு என்ற பெயரில் எங்களைப் படாத பாடு படுத்தி விட்டார். வாய்க்கு





ருசியாகச் சாப்பிடவே அனுமதிக்கவில்லை. நல்ல ஆடைகளை உடுத்த விடவில்லை. இவ்வளவுக்கும் விவசாயத்திலிருந்து நிறையப் பணம் கிடைத்துக் கொண்டிருந்தது. ஆனால் என்ன பயன்? அவர் போனார். பழைய கட்டுப்பாடுகள் எல்லாம் இல்லை. இப்போது நாங்கள் சந்தோஷமாக இருக்கிறோம்" என்றாள்.

மகன்களில் ஒருவனும் "அவர் இறந்த பிறகுதான் இந்த வீட்டில் எல்லோர் முகத்திலும் சிரிப்பைக் காண்கிறோம். அவரால் எப்போதும் தொல்லையே. இப்போது அவரது மூத்த மனைவியின் மகனால் தொல்லை. அவன் குடிகாரன். குடித்துவிட்டு தினமும் ஒரு வம்பைக் கொண்டு வருகிறான். அதை நாங்கள் தான் தீர்த்து வைக்க வேண்டி வருகிறது" என்றான்.

அவர்களது பேச்சைக் கேட்ட பிசாசு அங்கே இருக்க விரும்பாமல் தேவசர்மாவை உடனே அங்கிருந்து கிளம்பும்படி கூறியது. தேவசர்மாவும் அந்த வீட்டை விட்டு வெளியே வந்தார்.

பிசாசு அவரிடம் "என் மூத்த மனைவியின் மகன் கஷ்டப்படுகிறான் போலிருக்கிறது. அவனைப் பார்க்கலாம்" என்றது. தேவசர்மா அவனைப் பற்றி சிலரிடம் விசாரிக்கவே அவர்கள் "அவனா? பெரிய குடிகாரனாயிற்றே. அவனுக்கு வீடு வாசல் என்று ஒன்று இருக்கிறதா என்ன? அந்தப் பனந்தோப்பில் குடித்துவிட்டுப் படுத்துக் கிடப்பான்" என்று கூறினார்கள்.

தேவசர்மா அந்தத் தோப்பிற்குப் போய் அங்கு போதையில் நினைவிழந்து கிடந்த பிசாசின் மகனை எழுப்பி நினைவிற்குக் கொண்டு வந்தார். அவர் அவனிடம் "உன் தந்தை உனக்கு ஒரு புதையலை விட்டுப் போயிருக்கிறார். அது கிடைத்தால் நீ என்ன செய்வாய்?" என்று கேட்டார்.

அவனும் "ஒரு பெரிய வீடு வாங்குவேன். பல வேலைக்காரர்களை வைத்துக் கொள்வேன். இஷ்டப்படி குடிப்பேன். இதுவரை என்னை கேலி செய்தவர்களைப் பழிவாங்கு

வேன். என் தந்தையின் படத்திற்கு மாலை போட்டு தினமும் பூஜை செய்து வருவேன்" என்றான்.

பிசாசு உடனே தேவசர்மாவிடம் "இவனுக்கு என் பணத்தைக் கொடுத்தால் நான் திருப்தி அடைவேன்" எனக் கூறி புதையல் உள்ள இடத்தை தேவசர்மாவிடம் கூறியது. அவரும் அந்த மகனிடம் அதைக் கூறவே மறு நிமிடம் பிசாசு மறைந்து போய் விட்டது. தேவசர்மா தன் ஊருக்கு வந்து விட்டார்.

அவர் தம் மனைவியிடம் "பார்வதி புரி மன்னன் கேளிக்கைகளில் மூழ்கிக் கிடப்பவன். அரசாங்க ஊழியர்கள் ஊழல் புரிபவர்கள். மக்களும் பிறரைப் பற்றிக் கவலைப்படாமல் தன் நலம் கருதியே வாழ்கிறார்கள். அவ்வூர் பிசாசு கூட என் வீடு, என் மகன் என்றுதான் எண்ணுகிறது. அங்கு யாருக்குப் பணம் கிடைத்தாலும் அது பிறருக்குப் பயன்படாது. இந்த நிலையில் எவ்வளவு நல்ல திட்டங்களை அந்நாட்டிற்குக் கொடுத்தாலும் அது அவற்றை வெற்றி கரமாகச் செயல்படுத்த முடிகிறதில்லை. தனிப்பட்டவர்களே அவற்றால் பயன் அடைகிறார்கள். இப்படி சுயநலம் கொண்டவர்களாக நிறைந்துள்ள நாடு எப்படி நம் நாட்டைப் போல வளமுள்ளதாக ஆக முடியும்?" என்றார்.

அவரது மனைவியும் "ஆமாம் எந்த ஒரு நாட்டில் சுயநலம் தலை தூக்கி விடுகிறதோ அங்கு எல்லாமே தாறுமாறாகத்தான் இருக்கும் மன்னன் ஆட்சியில் கவனம் செலுத்தாமல் இருந்தால் அதிகாரிகள் லஞ்சம் வாங்குவார்கள். இப்படிப்பட்ட நாடு எப்படியும் முன்னேற முடியாது தான்" என்றாள்.

தேவசர்மாவின் இக் கருத்துக்கள் பார்வதிபுரிக்கும் எட்டி விட்டது. அங்கு விழிப்புணர்வு ஏற்பட்டது. மக்களும் மன்னனும் தன் நலம் கருதாமல் செயல்படவே அந்நாடும் துர்க்காபுரிக்குச் சமமாய் வளமுள்ள நாடாகிவிட்டது.



# அம்புலிமாமா செய்திகள்



## ஸ்கிப்பிங்கில் சாதனை!

சென்னை டாக்டர் ஜி. ராம்பிரசாத் என்பவர் ஐந்து மணி நேரத்தில் 40,101 முறை ஸ்கிப்பிங் கயறு தாண்டி 'கின்னெஸ்' புத்தகத்தில் இடம்பெற முயற்சித்துள்ளார். இப்படி ஸ்கிப் பிங்ஸ் தாண்டுபவர்கள் ஒருமணிக்கு ஒருமுறை ஐந்து நிமிடங் களாவது இளைப்பாறுவது உண்டு. ஆனால் 22 வயது ஹௌஸ் சர்ஜனான இவர் 20 செகண்டுகள் மட்டுமே இளைப்பாறி னார். இரண்டு ஆண்டுகளுக்கு முன் இவர் ஒரு மணியில் 3,500 தோப்புக் கரணங்கள் போட்டு அதை கின்னெஸ் புத் தகம் வெளியிடுவோருக்கு அறிவித்தார். ஆனால் அது போய்ச் சேர்வதற்குள் அவ்வாண்டுப் புத்தகம் வெளியிடப்பட்டு விட் டது. அதனால் இந்த ஆண்டு முன் ஜாக்கிரதையாக ஆதாரங் களுடன் தம் சாதனையை அவர்களுக்குத் தெரியப்படுத்தியுள் ளார். இவர் மணிக்கு 8,556 ஸ்கிப்பிங்க்ஸ்தாண்டியதை 'லிம்கா' நிறுவனம் ஏற்கனவே வெளியிட்டுள்ளது. இவர் குழந்தை வைத்தியத்தில் அக் கறை காட்டுகிறார்.



## சாதனைக்காக முயற்சி!

கோவையைச் சேர்ந்த பார்த்தசாரதி என்ற உடற் பயிற்சி ஆசிரியர் விரைவில் இன்னொரு சாதனையை நிகழ்த்தப் போகிறாராம். இவர் மணிக்கு 5நிமிடம ஓய்வு எடுத்துக் கொண்டு 9 மணி நேரத்தில் 8,500 குட்டிக் கரணங்களைப் போடமுடியுமாம். இதற்கு 16கி.மீ. பாதை தேவை. பாதையில் எந்த இடையூறும் ஏற்படாமல் அதி காரிகள் பார்த்துக் கொள்ள வேண்டும். நல்ல விளை யாட்டு வீரரும் கராத்தேயில் 'கறுப்புபெல்ட்'டை வாங்கிய வருமானபார்த்தசாரதி இதற்காக ஓராண்டுகாலம் பயிற்சி செய்து வருகிறார். இத்துறையில் அமெரிக்காவின் யஷ்ரீ டர் ஷர்மன் பத்தரை மணி நேரத்தில் 8341 குட்டிக் கர ணங்கள் போட்டு சாதனை படைத்துள்ளார்.



## பதினோரு ஆண்டுகள் நடந்தவர்

ஸ்காட்லண்டின் பியோனா காம்ப்பெல்லின் வயது 27. இவர் இங்கிலாந்தின் வடக்கு பகுதியிலுள்ள தன் சொந்த ஊரான ஓகோட்ஸிலிருந்து தனது 16வது வயதில் 1363 கி.மீ. தூரம் நடந்தே சென்று தென்பகுதியை அடைந்தார். இதன் பின் அவர் ஐந்து கண்டங்களில் பதினோறு ஆண்டுகளில் 31338கி.மீ. தூரம் நடந்து கடந்த அக்டோபர் 14ல் தன் சொந்த ஊருக்குத் திரும்பி வந்தார். இவர் ஆஸ்திரேலியாவில் சிட்னி யிலிருந்து பெர்த் வரையிலும், ஆப்பிரிக்கா கண்டத்தில் ஒரு முனையிலிருந்து மறுஎதிர்முனை வரையிலும் நடந்தே சென் றார். இவர் தனியே செல்லாமல் கூடவே யாராவது ஒருவ ரைத் துணை கொண்டே நடந்து சென்றாராம்.




ஹஸ்தினாபுரத்திற்கு அருகிலுள்ள காட்டில் இரணியதமியன் என்ற வேடுவ மன்னன் இருந்தான். அவன் மகன் ஏகலைவன். துரோணரிடம் வந்து பல நாட்டு அரசகுமார்கள் அஸ்திர சாஸ்திர வித்தைகள் கற்கிறார்கள் என்பது அவனுக்குத் தெரிந்தது.

அவன் ஹஸ்தினாபுரம் சென்று துரோணரைக் கண்டு தன்னையும் அவரது மாணாக்கனாக ஏற்கும்படி வேண்டினான். அவன் வேடுவன் என அறிந்த துரோணர் அவனைத் தன் மாணாக்கனாக ஏற்க மறுத்து விட்டார்.

ஏகலைவன் பணிவுடன் அவரை வணங்கி விட்டுத் தன் காட்டிற்குச் சென்றான். அங்கு அவன் ஓரிடத்தில் துரோணரின் பதுமை ஒன்றைச் செய்து வைத்தான். அதனைத் தன் குருவாக எண்ணி அவன் அம்புகளை எய்து அவன் தினமும் பழகலானான். அப்படிப் பழகி அவன் வில்வித்தையில் துரோணரின் எல்லாச் சீடர்களையும் மிஞ்சி விட்டான்.

ஒருநாள் துரோணர் அரசகுமாரர்களுடன் வேட்டையாட ஏகலைவயன் உள்ள காட்டிற்கு வந்தார். வேட்டை நாய்களில் ஒன்று ஓடி ஏகலைவன் வைத்திருந்த துரோணரின் சிலை முன்போய் அசிங்கம்செய்து அவனை பார்த்துக் குரைத்தது. இதைக் கண்ட ஏகலைவன் தன் வில்லில் ஏழு அம்புகளை வைத்து அவை ஒன்றாகப்

-ஏகலைவன் கதை-




போய் அந்த நாயின் வாயை இறுக மூடும்படிச் செய்தான். நாயால் குரைக்க முடியவில்லை. அது அரச குமாரர்கள் இருக்கும் இடத்திற்கு ஓடியது.

ஒரு நாயின் வாயை அது குரைக்காமல் அம்புகளால் கட்டி விட்டவன் சிறந்த வில்லாளியாக இருக்க வேண்டும் என எண்ணி அவர்கள் அவன் யாரென்று காணக் கிளம்பிச் சென்றார்கள். அவர்கள் முடிவில் ஏகலைவனைக் கண்டு "நீயா எங்கள் நாயின் வாயை அம்புகளால் கட்டிப் போட்டவன்? உனக்கு வில் வித்தை கற்பித்த குரு யார்?" என்று கேட்டார்கள்.

ஏகலைவனும் "என் பெயர் ஏகலைவன். நான் வேடுவ மன்னனின் மகன். நான் துரோணரை என் குருவாகக் கருதி அம்புகளை எய்து பயிற்சி அடைந்து வருகிறேன்" என்றான். அரச குமாரர்கள் துரோணரிடம் போய் ஏகலைவனைப் பற்றிக் கூறினார்கள்.

அப்போது அர்ஜுனன் அவரிடம் "குருவே! உலகில் என்னைவிடத் திறமை மிக்க வில்லாளி இருக்க மாட்டான் எனக் உறுதி கூறி எனக்கு வில் வித்தை கற்பித்து வருகிறீர்கள், ஆனால் தங்களது சீடன் எனக் கூறிக் கொள்ளும் ஏகலைவன் என்னை மிஞ்சிவிட்டான். நீங்கள் கொடுத்த வாக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டான்.

அதைக் கேட்ட துரோணர் அர்ஜுனனை மட்டும் அழைத்துக் கொண்டு ஏகலைவன் இருக்கும் இடத்திற்குச் சென்றார். அப்போது ஏகலைவன் அம்புகளை எய்து பழகிக் கொண்டிருந்தான். துரோணர் வருவது கண்டு அவன் ஓடோடி வந்து அவரை வணங்கினான். அவரை மரியாதையுடன் உட்கார வைத்து அவன் "உங்களது சீடன் ஏகலைவன் நான்" என்று கூறி அவரது கால்களில் விழுந்து வணங்கினான்.

துரோணரும் "நீ என் சீடன் என்கிறாயே. ஆனால் எனக்கு குருதட்சிணை எதுவும் கொடுக்கவில்லையே!" என்று கேட்டார். அவனும் "தாங்கள் எதைக் கேட்டாலும் நான் குருதட்சிணையாகக் கொடுக்கிறேன்"

என்றான். துரோணரும் "அப்படியானால் நீ உன் வலது கைக்கட்டை விரலை குருதட்சிணையாகக் கொடு" என்று கூறினார்.

ஏகலைவன் சற்றும் தயங்காமல் தன் வலது கைக்கட்டை விரலை அறுத்து துரோணருக்குக் குருதட்சிணையாகக் கொடுத்து விட்டான். அதற்குப்பின் அவன் வலது கையில் மிஞ்சிய விரல்களைக் கொண்டுதான் அம்பு எய்ய வேண்டியதாயிற்று. அவனால் முன்போல் வேகமாகவோ திறமையாகவோ அம்பு எய்ய முடியாமல் போய்விட்டது. இப்படியாக அர்ஜுனன் சிறந்த வில்லாளி எனத் திகழ துரோணர் வழி செய்தார்.

துரோணரிடம் பாண்டவர்கள் வில் வித்தை பயின்ற போது மற்ற வித்தைகளையும் திறம்படக் கற்றனர். தருமர் தேரோட்டி போர் புரிவதிலும் பீமன் கதையைச் சுழற்றிப் போர் புரிவதிலும் சிறந்து விளங்கினார்கள். அர்ஜுனன் சிறந்த வில்லாளியானான். வில்வித்தையில் அவனுக்கு நிகராக யாருமே இல்லை எனும்படித் திறமை பெற்றான். நகுலனும் சகாதேவனும் வாட்போரில் சிறந்து விளங்கினார்கள்.

இவற்றையெல்லாம் கண்டு துரியோதனனும் அவனது சகோதரர்களும் பாண்டவர்கள் மீது பொறாமை கொண்டார்கள். குறிப்பாக பீமனும் அர்ஜுனனும் அவர்களது கண்களை உறுத்தி வந்தார்கள்.



ஒருநாள் துரோணர் தம் சீடர்களைப் பரீட்சிக்க எண்ணி ஒரு மரத்தின் மீது ஒரு பொம்மைப் பறவையை வைத்தார். தம் சீடர்களை எல்லாம் அழைத்து அப்பறவையை அம்பால் அடிக்க வேண்டும் எனக் கூறவே எல்லோரும் தாம் தயார் என்றார்கள்.

முதலில் தருமர் வில்லை எடுத்துக் கொண்டு நின்றார். துரோணர் "இப்போது நீ என்ன பார்க்கிறாய்?" என்று கேட்கவே அவரும் "நான் மரத்தின் மீது பறவையைப் பார்க்கிறேன். உங்களையும் மற்றவர்களையும் பார்க்கிறேன். எல்லோருமே எனக்குத் தென்படுகிறார்கள்" என்றார். அப்போது துரோணர் "உன்

னால் அந்தப் பறவையைக் குறி வைத்து அடிக்க முடியாது" எனக் கூறி மற்றவர்களிடமும் அதே கேள்வியைக் கேட்டார். அவர்களும் தருமர் கூறியது போலத்தான் பதில் கூறினார்கள்.

அர்ஜுனன் கடைசியில் வந்தான். அவனிடம் துரோணர் அதே கேள்வியைக் கேட்டபோது அவன் "எனக்கு அந்த பொம்மைப் பறவை ஒன்றுதான் தெரிகிறது. வேறு ஒன்றும் தெரியவில்லை" என்றான். துரோணரும் "சபாஷ். அம்பை எய்" என்றார். எனவே அர்ஜுனனும் அம்பை எய்தான். அது அந்தப் பொம்மைப் பறவையைத் தாக்கி அதனைக் கீழே விழச் செய்தது.

துரோணர் அர்ஜுனனைப் பாராட்டினார். தம் மனதில் அவன்தான் துருபதனைப் போரில் வெல்லக் கூடியவன் என்றும் அவர் எண்ணிக் கொண்டார். ஒருநாள் துரோணர் தம் சீடர்களோடு யமுனை நதியில் குளிக்கச் சென்றார். அவர் ஆற்றில் இறங்கிக் குளித்துக் கொண்டிருக்கும் போது ஒரு முதலை அவரது தொடையைப் பற்றிக் கொண்டது. அவர் அலறித் தன் சீடர்களிடம் அம் முதலையை அம்பால் அடித்துக் கொல்லும்படிக் கூறினார். எல்லோரும் அம்புகளை எய்தும் அவை முதலை மீது படவில்லை.

அர்ஜுனன் மட்டும் குறிவைத்து முதலையை அடித்தான். அது முதலையின் உடலில் பாய்ந்து அதனைக் கொன்றது. துரோணர் அர்ஜுன



னைப் பாராட்டி "அர்ஜுனா! நீ நன்கு வில் வித்தையைக் கற்றிருக்கிறாய். உனக்கு பிரம்மசிரோநாமம் என்ற அஸ்திரம் பிரயோகிக்கும் விதத்தை உபதேசிக்கிறேன். நீ அதை சாதாரண மனிதர்கள் மீது பிரயோகிக்கக் கூடாது. அபார தெய்வீக சக்தி வாய்ந்தவர் மீதே பிரயோகிக்க வேண்டும். தவறி எய்தால் உலகமே எரிந்து போய்விடும்" என்றார்.

அர்ஜுனன் உடனேயே குளித்து விட்டு வந்து பக்தி சிரத்தையுடன் பிரம்மசிரோநாமாஸ்திர உபதேசம் பெற்றான்.

ஒருநாள் துரோணர் திருதராஷ்டிரனின் ராஜ சபைக்குச் சென்றார். அப்போது அங்கு வியாசர், பீஷ்மர், விதுரர், கிருபர், பாஹ்லிகர், சோமதத்தர் முதலானோரும் இருந்தனர். துரோணர் திருதுராஷ்டிரனிடம் "அரசே! அரச குமாரர்கள் இவ்வளவு காலமாக என்னிடம் வில் வித்தைகள் பல கற்றார்கள். நீங்கள் அவர்களைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டும்" என்றார்.

திருதராஷ்டிரன் விதுரனிடம் அதற்கான ஏற்பாடுகளைச் செய்யும் பொறுப்பைக் கொடுத்தான். ஏற்பாடுகள் சிறந்த முறையில் செய்யப்பட்டன. அஸ்திரசாஸ்திர வித்தைகளை யாவருக்கும் அரசகுமாரர்கள் காட்ட ஒரு பெரிய அரங்கம் நிர்மாணிக்கப் பட்டது. அதில் ஆயிரக்கணக்கில் மக்கள் அமர்ந்து பார்க்கவும் வசதிகள் செய்யப்பட்டிருந்தன.

ஒரு நல்ல நாளில் போட்டிகள்





நடக்க ஏற்பாடு செய்யப்பட்டது. பீஷ்மர், கிருபர், திருதராஷ்டிரன் முதலியோர் வந்து தமக்கான ஆசனங்களில் அமர்ந்தார்கள். காந்தாரி, குந்தி முதலிய அந்தப்புரப் பெண் மணிகளும் பல்லக்குகளில் வந்து தம் இருக்கைகளில் அமர்ந்தனர். யாவரும் வந்தபின் துரோணரும் அசுவத்தாமனும் அந்தத் திறந்தவெளியின் நடுவே வந்து நின்றார்கள்.

அரசகுமாரர்களும் கவசம் தரித்து வில் அம்பு, ஆயுதங்கள் முதலியவற்றோடு உற்சாகத்துடன் அந்தத் திறந்த வெளியில் வந்து நின்றார்கள். அவர்கள் யாவருக்கும் முன் வந்தவர் தருமரே. அவர் பின்னால் மற்றவர்கள் வந்தார்கள்.

ரதங்கள், குதிரைகள், யானைகள் என்றெல்லாம் வர அவற்றில் அமர்ந்து அரசகுமாரர்கள் தாம் கற்றவற்றை எல்லாம் செய்து காட்டினார்கள். வில்வித்தையில் தம் திறமைகளைக் காட்டினார்கள். அம்புகள் 'விர் விர்'ரென்று பாய்ந்து சென்று யாவரையும் வியக்கச் செய்தன.

அந்த அரங்கில் நடந்து கொண்டிருந்ததை அப்போதைக்கப்போது விதுரர் திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும் சொல்லி வந்தார். சற்று நேரத்திற்குப்பின் பீமனும், துரியோதனனும் தம் கதைகளை எடுத்துக் கொண்டு கதைப் போர்புரிய வந்தனர். இது அவர்களது திறமையைக் காட்ட ஏற்பாடு செய்யப்பட்ட போட்டி என்றாலும் பார்வையாளர்களில் சிலர் பீமனையும் வேறு சிலர் துரியோதனனையும் உற்சாகப்படுத்தினார்கள். நிலைமை விபரீதமாகி விடும் என்று உணர்ந்த துரோணர் அவர்களது போட்டியை நிறுத்தும்படி அசுவத்தாமனிடம் கூறவே அசுவத்தாமனும் அவ்வாறே செய்தான்.

அர்ஜுனன் வில்லில் அம்புகளை ஏற்றிப் பல அதிசயங்களைச் செய்து காட்டினான். தன் அஸ்திரங்களால் நீர், நெருப்பு, வாயு, மேகம் என்றெல்லாம் வரவழைத்துக் காட்டினான். ஒரு அஸ்திரம் எய்து அவனே மாயமாய் மறைந்தான். மற்றொரு முறை சுழலும் பந்தில் ஐந்து அம்புகள் குத்தி நிற்கும்படி எய்தான். ஒரு

மாட்டின் கொம்புகளிடையே இருபத்தோரு அம்புகளை எய்து ஒன்றோடு ஒன்று கோர்த்துக் கொண்டிருக்கச் செய்தான்.

அரசகுமாரர்களெல்லாம் இப்படியாகத் தாம் கற்றவற்றை எல்லாம் செய்து காட்டி முடித்தனர். அப்போது கர்ணன் அங்கு வந்தான். அவன் கவசத்தோடும் காதில் குண்டலங்களோடு பிறந்தவன். அவன் துரோணரையும் கிருபரையும் வணங்கி விட்டு "அடே அர்ஜுனா! வில்வித்தையில் நீதான் சிறந்தவன் என்று எண்ணிக் கொள்ளாதே. நீ செய்து காட்டியதை எல்லாம் என்னாலும் செய்துகாட்ட முடியும்" என்றான்.

இதைக்கேட்டு அர்ஜுனன் ஆத்திரம் கொண்டான். பார்வையாளர்களும் முகத்தை சுளித்தார்கள். உண்மையில் கர்ணனுக்கும் அர்ஜுனனுக்குள்ள திறமை இருந்தது. துரியோதனன் உடனே ஓடிவந்து அவனைக் கட்டித் தழுவிக் கொண்டு "இன்றுமுதல் நீ என் சகோதரன். எங்களுடன் இரு" என்றான்.

கர்ணனும் அதற்கு ஒப்புக் கொண்டு துரோணரிடம் "என்னை அர்ஜுனனுடன் போட்டியிட இங்கு அனுமதிக்க வேண்டும்" என்று கேட்டான். அர்ஜுனனும் தான் அப்போதே தயார் என்று கூறினான். இதுகண்டு குந்தி மயக்கமுற்று விழுந்தாள். பணிப்பெண்கள் சட்டெனத் தக்க சிகிச்சையளித்து அவளை உணர்விற்குக் கொண்டு வந்தார்கள்.

அப்போது கிருபர் கர்ணனிடம் "அப்பனே! இங்கு அரச குமாரர்களிடையேதான் போட்டிகள் நடக்கின்றன. அதனால் நீ யார், எந்த ஊர், எக்குலத்தைச் சேர்ந்தவன் என்பனவற்றை எல்லாம் சொல். நீ ஒருக்ஷத்திரிய வம்சத்தைச் சேர்ந்தவன் என்றாலே அர்ஜுனனுடன் போட்டி போடலாம்" என்றார்.

கர்ணன் தன்னை வளர்த்து வந்தவர்களைப் பற்றிக் கூற வெட்கப்பட்டு நின்றான்.





# நானே மணமகன்!

கொடியூர் என்ற கிராமத்தில் கோதண்டம் என்ற பணக்காரன் இருந்தான். அவனுக்கு மூன்று மகன்கள். கோதண்டமும் அவன் முதல் இரு மகன்களும் சற்றும் ஈவிரக்க மற்றவர்கள். தாம் உயர் அந்தஸ்தில் இருப்பவர்கள் என்று எண்ணி வேலைக்காரர்களிடம் தயை தாட்சண்யம் காட்டவே மாட்டார்கள். ஆனால் கோதண்டத்தின் கடைசி மகனான கண்ணன் எல்லோரிடமும் நன்கு பழகினான். வேலைக்காரர்களை மதித்து வந்தான்.

அவன் தன் தந்தையிடமும் சகோதரர்களிடமும் தன் வயலில் வேலை செய்யும் ஆட்களுக்காகப் பரிந்து பேசி வந்தான். வேலைக்காரர்களும் மனிதர்களே எனக் கருதி மனிதாபிமானத்துடன் அவர்களை நடத்த வேண்டும் என்று கூறி வந்தான்.

அவர்களோ "இதெல்லாம் வெறும் பேச்சு. நடைமுறைக்கு உதவாது. வேலைக்காரர்களுக்கு அதிக இடம் கொடுத்தால் அவர்கள் நம் தலைமீது ஏறி உட்கார்ந்து விடுவார்கள். அப்புறம் நம் கதி அதோகதி தான்" என்று கூறினர்.

கோதண்டத்திடம் பல வருடங்களாக வேலை செய்து வந்தவன் பெருமாள். அவனுடைய தூரத்து உறவினன் ஒருவன் புலியூரில் இருந்தான். அவன் தன் ஒரு ஏக்கர் நிலத்தை முன்பு பெருமாள் தன் உயிரைக் காப்பாற்றியதை நினைவில் வைத்துக் கொண்டு அவன் பெயருக்கு எழுதி வைத்துவிட்டு இறந்து போனான். எனவே பெருமாள் தன் எஜமானன் கோதண்டத்திடம் போய் "ஐயா! புலியூரில் எனக்கு ஒரு ஏக்கர் நிலம் கிடைத்துள்ளது. எனவே நான் உங்கள் வேலையை விட்டுப் போக எனக்கு அனுமதி கொடுங்கள்" என்று

-லாவண்யா வெங்கட்-



வேண்டினான்.

அது கேட்டுக கோதண்டம் எரிந்து விழுந்து "இங்கு வேலையை விட்டுப் போவதானால் இரண்டு மாதங் களுக்கு முன்பே தெரிவிக்க வேண்டும் என்பது நிபந்தனை. அதனால் இன்றி லிருந்து இரண்டு மாதம் கழித்து நீ போகலாம்" என்று சற்றும் இரக்க மில்லாமல் கூறினான். வேறு வழி யின்றி பெருமாள் இரண்டு மாதம் வேலை செய்து விட்டுப் புலியூருக்குச் சென்றான்.

பெருமாள் தன் மனைவியுடனும் மகளுடனும் புலியூரில் புதுக் குடித் தனம் வைத்து விட்டு தனக்குக் கிடைத்த நிலத்தில் விவசாயம் செய்ய ஏற்பாடுகளைச் செய்யலானான். அவ னுக்கு முன்பின் தனியாக விவ சாயம் செய்து பழக்கம் கிடையாது. கணக்குப் போட்டுப் பார்த்ததில் விவசாயம் ஆரம்பிக்க அவனுக்கு ஒரு பெருந்தொகை தேவைப்பட்டது.

அவனுக்கு யார் கடன் கொடுப் பார்கள்? இதனை அறிந்து கொண்டு அவனது நிலத்திற்கு அடுத்த நிலத்தை வைத்திருப்பவன் பெருமா ளிடம் "நீ உன் நிலத்தில் பாதியை எனக்கு கொடுத்துவிடு. உனக்கு விவசாயம் செய்யப் பணம் கிடைக் கும். நீ நன்கு விவசாயம் செய்து இன்னும் வயல்களை வாங்கிப் போடலாம்" என்றான்.

பெருமாளுக்கு இந்த யோசனை மிகவும் பிடித்தது. அவன் தன் ஒரு ஏக்கர் நிலத்தில் அரை ஏக்கர் நிலத்தை அடுத்த வயல்காரனுக்கு விற்று அதில் கிடைத்த பணத்தைக் கொண்டு விவசாயத்திற்கு வேண்டிய உபகரணங்களையும், ஏர், எருதுகள் என்றெல்லாம் வாங்கிக் கொண்டு விவசாயத்தில் தீவிரமாக ஈடுபட் டான். அவன் நிலத்தில் நல்ல விளைச் சல் காணவே நிறையப் பணம் கிடைத் தது. அதைக் கொண்டு மேலும் ஒரு வயலை வாங்கினான். இப்படியாக ஐந்து வருடங்களுள் ஐந்து ஏக்கர் நிலம் வாங்கி விட்டான். அவனது பொருளாதார நிலையும் மேம்பட்டது.

அவனது மகளும் விவாக வயதை அடையவே அவளுக்கு நல்ல இடத் துப் பையனைப் பார்த்துத் திருமணத்

தையும் நிச்சயித்தான். அத்திருமணத்திற்கு கோதண்டத்தை அழைக்கக் கொடியூர் போனான். கோதண்டமும் அவனது முதலிரண்டு மகன்களும் சரியாக முகம் கொடுத்து பேசக்கூட இல்லை. ஆனால் கண்ணன் பெருமாளைத் தனியே சந்தித்துத் தான் திருமணத்திற்கு வருவதாகக் கூறி அனுப்பினான்.

கண்ணன் பெருமாளின் மகளின் திருமணத்திற்குப் போவதை கோதண்டமும் அவனது இரு மகன்களும் கேலி செய்தனர். ஆனால் கண்ணன் அதைப் பொருட்படுத்தாமல் புலியூருக்குப் போய் பெருமாளின் வீட்டை அடைந்தான். பெருமாள் ஏனோ தவியாய் தவித்துக் கொண்டிருந்தான். திருமணத்தின் போது வரதட்சணைப் பணத்தைக் கொடுப்பதாகக் கூறி இருந்தான். ஆனால் அவனுக்கு அத்தொகையைக் கடனாகக் கொடுப்பதாகக் கூறி இருந்தவர் திடீரென மாரடைப்பால் முந்தைய தினம் இறந்து விட்டார். பெருமாளால் வேறு யாரிடமும் அவ்வளவு பெரிய தொகையைக் கடன் வாங்க முடியவில்லை.

மாப்பிள்ளையின் தந்தையோ பணம் வந்தால்தான் திருமணம் நடக்கும் என ஒரே பிடிவாதமாகக் கூறி விட்டான். கண்ணன் கூட பெருமாளின் நிலையைக் கூறினான். ஆனால் மாப்பிள்ளையின் தந்தையோ பணம் வராவிட்டால் திருமணம் இல்லை எனக் கூறி தன் மகனோடு கிளம்பத் தயாரானான். பெருமாள்





தன் நிலத்தைப் பணத்திற்குப் பதில் எழுதி வைப்பதாகக் கூறினான்.

ஆனால் அவனது மகள் தேவி "அப்பா! உங்கள் பேச்சை இதுவரை நம்பாமல் பணம்தான் வேண்டும் என்று இவர்கள் பிடிவாதம் பிடித்தார்கள். பணத்தாசை பிடித்த இவர்கள் வீட்டு மருமகளாகப் போக நான் தயாராக இல்லை" எனறாள். அதுகேட்டு மாப்பிள்ளையின் தந்தை "இந்த பெண் எவ்வளவு திமிராகப் பேசுகிறாள்! இவளை என் மகன் திருமணம் செய்து கொள்ளவே மாட்டான்" எனக் கூறி அப்போதே தன் குடும்பத்தோடு கிளம்பிப் போய் விட்டான்.

பெருமாள் இடிந்து போய் உட்கார்ந்து விட்டான். ஒரு பெண்ணின் கல்யாணம் தாலி கட்டும் போது நின்று விட்டால் அவளுக்கு மறுபடியும் கல்யாணம் நடப்பது சிரமமே. அவனது திகைப்பைக் கண்ட கண்ணன் "கவலைப்பட வேண்டாம். சிறு வயதிலிருந்தே தேவியை எனக்கு பிடித்துப் போயிற்று. இதே முகூர்த்தத்தில் நான் அவளை மணந்து கொள்கிறேன். என் தாய் தந்தையரை நான் சமாதானப்படுத்திக் கொள்கிறேன்" என்று கூறி அதே முகூர்த்தத்தில் தேவியை மணந்து கொண்டான்.

கண்ணன் தேவியை அழைத்துக் கொண்டு கொடியூருக்குச் சென்றான். ஆனால் கோதண்டம் அவனைக் கடிந்து கொண்டு "உனக்கு இனி இந்த வீட்டில் இடமில்லை. நீ உன் மனைவியுடன் எங்கள் கண்ணில் படாமல் எங்கேயாவது போய் வாழ். என் மகன் என்பதற்காகக் கொஞ்சம் பணம் கொடுக்கிறேன்" என்று கூறிப் பணத்தைக் கொடுத்து அனுப்பி விட்டான்.

கண்ணன் தேவியுடன் புலியூருக்கே திரும்பிச் சென்றான். தன் தந்தை கொடுத்த பணத்தில் கொஞ்சம் நிலம் வாங்கி விவசாயம் செய்யலானான். நாளாவட்டத்தில் அவன் விவசாயம் நன்கு நடந்தது. அவன் எல்லோருக்கும் உதவி ஊராரின் நன்மதிப்பையும் பெற்று விட்டான்.

கொடியூர் கடற்கரை ஓரமாக அமைந்த சிறிய ஊர். கண்ணன்

வீட்டை விட்டு வந்த மூன்றாவது ஆண்டில் கடல் பொங்கி கொடியூருக்குள் நுழைந்து பல மைல் தூரத்திற்கு மணலைப் பரப்பி வயல்களை எல்லாம் பாழாக்கி வீடுகளையும் சேதப்படுத்தி விட்டது.

இதில் வீடு வாசல் வயல் எல்லாவற்றையும் இழந்தவன் கோதண்டமே. ஊரே பாழானதால் அங்கிருந்த எல்லோரும் வெவ்வேறு இடங்களுக்குத் தம் குடும்பங்களோடு போய் விட்டனர். இவ்வாறு வந்த சில குடும்பங்களுக்குக் கண்ணன் தலைமையில் புலியூர் புகலிடம் அளித்தது.

கண்ணன் தன் தாய் தந்தையரும் சகோதரர்களும் எங்கு சென்றார்களோ எனத் தேடலானான். அவனோடு தேவியும் பெருமாளும் சேர்ந்து தேடலாயினர். அவர்கள் தம் ஊரை விட்டுக் கொஞ்சதூரம் போனதுமே கோதண்டத்தையும் அவனது குடும்பத்தவரையும் கண்டு விட்டனர்.

அவர்கள் கண்ணனையும் தேவியையும் பெருமாளையும் பார்த்ததுமே கண்ணீர் வடித்துக் கதறி அழுதார்கள். கண்ணன் தன் தந்தையின் கரங்களைப் பற்றிக் கொண்டு "அப்பா, கவலைப்படாதீர்கள். நாம் எல்லோரும் இங்கு ஒன்றாகவே இருப்போம். நம்மில் ஏற்றத் தாழ்வும் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பாகுபாடும் இராது. கொடியூர் முன் போலாகப் பல ஆண்டுகள் ஆகலாம். அதுபற்றிக் கவலைப்பட வேண்டாம்" என்றான். தேவியும் பெருமாளும் அவர்களை வணங்கித் தம்முடனேயே இருக்குமாறு வேண்டினார்கள்.

கண்ணனின் தாராள மனப்பான்மை கண்டு கோதண்டமும் அவனது இரு மகன்களும் உள்ளம் பூரித்துப் போயினர். அவர்கள் தம் முந்தைய செய்கைகளுக்காக வருந்தினர். அவர்களது அகம்பாவம் அழிந்தது. கண்ணனுடனும் பெருமாளுடனும் சேர்ந்து அவர்கள் புது வாழ்வைத் தொடங்கினார்கள்.





# அளவில்லையே!

ஒரு நாட்டில் ஒரு ஏழை மனிதன் இருந்தான். அவன் ஊர் ஊராகப் போய் பிச்சை கேட்டு வாங்கி உண்டு காலம் கழித்து வந்தான். அறுவை நாட்களில் அவனுக்கு வயிறு நிறைய உணவோ அரிசியோ கிடைக்கும். அதற்குப் பின் எதுவும் கிடைக்காது. பல நாட்கள் பட்டினியே கிடக்க வேண்டி வரும்.

ஒரு ஆண்டில் அவனுக்கு இதே நிலை ஏற்பட்டது. மூன்று நாட்களாக ஒரு ஊரில் உண்ண எதுவும் கிடைக்காது போகவே அவன் அடுத்த ஊருக்குப் போகலானான். வழியில் அவனை ஒரு கிழவன் பார்த்து "பாவம் பசியாக இருக்கிறாயா? இந்தா ஒரு வேர்க்கடலை" என்று கூறி ஒரு வேர்க்கடலையை அவன் கையில் வைத்தான்.

அந்த ஏழையோ "என் பசிக்கு இந்த வேர்க்கடலை எந்த மூலைக்கு?" எனவே அந்தக் கிழவனும் "இதை நீ சாப்பிட்டு விடாதே. இது உன்னிடத்தில் இருக்கும் வரை உன்னை எல்லோரும் வரவேற்று உணவு அளிப்பார்கள். எனவே நீ பட்டினி கிடக்க வேண்டிய அவசியமே இராது" என்று கூறிவிட்டுப் போனான்.

அந்த ஏழை அந்தக் கிழவன் கூறியதை நம்பவில்லை. ஒரு வேர்க்கடலைக்கு அபூர்வ சக்தி இருக்கிறது என்று யாராவது கூறினால் அவன் பைத்தியக்காரனாகத்தான் இருப்பான் என்று அவன் நினைத்தான். ஆனாலும் அதை எடுத்துக் கொண்டு சென்றான்.

அந்த ஏழை அந்த வேர்க் கடலையை எடுத்துக் கொண்டு அடுத்த ஊரை அடைந்த போது இரவாகி விட்டது. அவன் ஒரு வீட்டின் முன் நின்று "ஐயா! சாப்பாடு இருந்தால்

-ரேணுகா ரவி-

கொடுங்கள்" என்று கூவினான். அந்த வீட்டுக்காரனும் வெளியே வந்து உணவு கேட்டவன் உள்ளூர்ப் பிச்சைக்காரனல்ல என்று கண்டு "ஓ! வெளியூர்க்காரனா! வா உள்ளே" என்று கூறி வீட்டினுள் அவனை அழைத்துச் சென்றான்.

அந்த வீட்டுக்காரன் அந்த ஏழையை உட்கார வைத்து உபசரித்து உணவு படைத்ததோடு "இரவு வெகு நேரமாகிவிட்டது. நீங்களோ அயலூரார். வேறு எங்கே போக முடியும்? இங்கேயே படுத்துத் தூங்கி விட்டு காலையில் செல்லுங்கள்" என்று கூறி அவனுக்குப் படுக்க வசதி செய்து கொடுத்தான்.

அந்த ஏழையின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அதுவரை யாருமே அவனை அழைத்து உபசரித்து உணவளித்துப் படுக்க வசதியும் செய்து கொடுத்தது இல்லை. அவன் தன்னிடமுள்ள வேர்க்கடலையின் மகிமையால்தான் இவ்வளவும் நடக்கிறது என்று எண்ணி மகிழ்ந்தான். கிழவன் கூறியது உண்மைதான் என்பது அவனுக்குத் தெரிந்து போயிற்று. எனவே சக்தி வாய்ந்த அதைத் தன் தலைக்குப் பக்கத்தில் வைத்துக் கொண்டு சுகமாகத் தூங்கினான்.

காலையில் அந்த ஏழை படுத்திருந்த இடத்திற்கு அவ்வீட்டுக் கோழி வந்தது. அவனருகே இருந்த வேர்க்கடலையை எடுத்து விழுங்கிவிட்டது.



அது கண்டு ஏழை எழுந்து "ஐயோ! என் வேர்க்கடலை போயிற்றே" என்று அலறினான். வீட்டுக்காரன் வந்து விஷயத்தைத் தெரிந்து கொண்டு "ஒரு வேர்க்கடலைக்கா இந்த ஆர்ப்பாட்டம்?" என்று கேட்டான்.

ஏழையோ "அது சக்தி வாய்ந்த வேர்க்கடலை. உன் கோழி அதை விழுங்கி விட்டதே" எனவே வீட்டுக்காரன் "என்னால் என்ன செய்ய முடியும்? நீ கூறும் சக்தி வாய்ந்த உன் வேர்க்கடலையைக் கொடுக்க முடியாது. வேண்டுமானால் அந்தக் கோழியை எடுத்துப்போ. பிடித்துத் தருகிறேன்" என்றான்.

ஏழை அதற்குச் சம்மதித்து அவன்



பிடித்துக் கொடுத்த கோழியை வாங்கிக் கொண்டு அடுத்த ஊருக்குப் போனான். அப்போது இரவாகி விட்டது. அவன் ஒரு வீட்டிற்குப் போய் அன்றிரவு தங்க இடம் கேட்கவே அந்த வீட்டுக்காரன் அவனை வரவேற்று உணவளித்து படுக்க இடம் அளித்தான். அவனும் தன் கோழியை பக்கத்தில் வைத்துக் கொண்டு படுத்துத் தூங்கினான்.

அவன் மெய்மறந்து தூங்கிக் கொண்டிருக்கும்போது அந்தக் கோழி ஓடிப்போய் அந்த வீட்டிலுள்ள மற்ற கோழிகளோடு சண்டையிட்டது. மற்ற கோழிகள் அதனை அடித்துத் துரத்தவே அது ஓடி ஒரு முரட்டுக் கன்றின் காலடியில் சிக்கி மிதிபட்டு இறந்து போயிற்று.

இந்த ஏழை "என் தங்கக் கோழி போய் விட்டதே" என்று புலம்பவே அந்த வீட்டுக்காரன் கோழியைக் கொன்ற முரட்டுக் கன்றைக் கொடுத்து சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தான். அவன் அதைப் பிடித்து இழுத்துக் கொண்டு வேறொரு ஊரை அடைந்தான். அப்போதும் இரவாகி விட்டது.

அவன் ஊர் எல்லையில் தென்பட்ட ஒரு பெரிய வீட்டில் நுழைந்து "ஐயா! நான் வெகு தூரத்திலிருந்து வருகிறேன். இவ்வூரில் எனக்குத் தெரிந்தவர் யாருமில்லை. இன்றிரவு இங்கே தங்க அனுமதியுங்கள்" என்று சற்று துணிவாகவே கேட்டான். அந்த வீட்டுக்காரனும் "ஐயோ பாவம்! வெளியூர்க்காரனா நீ? இந்த ஊரில் யாரையும் தெரியாது என்கிறாய். சரி. இரவில் தங்க இடம் கொடுக்கிறேன்" என்று கூறி அவனுக்கு இடம் கொடுத்தான்.

அன்று அந்த வீட்டில் ஏதோ ஒரு விசேஷம். அதனால் பல உறவினர்கள் வந்திருந்தார்கள். பெரிய விருந்தும் நடந்தது. ஏழையும் அதில் கலந்து கொண்டு நன்கு சாப்பிட்டான். அவனது முரட்டு கன்று கட்டப்பட்டிருந்த கட்டை அவிழ்த்துக் கொண்டு ஓடி குதிரை லாயத்திலிருந்த புல்லைத் தின்றது. அப்போது அங்கிருந்த குதிரை தன் பின்னங்காலால் கன்றை பலமாக

உதைக்கவே அது துடித்து விழுந்து இறந்தது.

ஏழை அந்த வீட்டுக்காரனுடன் சண்டையிடவே அந்த வீட்டுக்காரன் வீண் தகராறு எதற்கு என எண்ணித் தன் குதிரையை ஏழைக்குக் கொடுத்து அனுப்பி விட்டான். ஏழையும் குதிரைமீதமர்ந்து பட்டணத்தை நோக்கிச் சென்றான்.

பட்டணத்தில் அவன் ஒரு சத்திரத்தை அணுகியபோது மாலைப் பொழுதாகிவிட்டது. சத்திர வாசலில் அழகிய பெண் ஒருத்தி நின்று கொண்டிருப்பதை அவன் கண்டான். அவளை மணந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை அவன் மனதில் எழுந்தது. அவன் உடனே குதிரை மீது இருந்து இறங்கி சத்திரத்துக் கணக்கனிடம் போய் தான் தங்க இடம் வேண்டுமென்று கேட்டான்.

ஏழை பார்த்த பெண் அந்தக் கணக்கனின் ஒரே மகள். அவளை மணந்து கொண்டால்தான் அச்சத்திரத்திலேயே இருந்து சுகமாகக் காலம் கழிக்கலாமென அவன் எண்ணினான். அவன் தன் குதிரையைக் கணக்கனிடம் ஒப்படைத்து "இதை நன்கு கவனித்துக் கொள்ளுங்கள். இது சாதாரணக் குதிரையல்ல. மிக விலையுயர்ந்தது" என்றான்.

கணக்கன் அக்குதிரையைப் பிடித்துக் கொண்டு போகும்போது அது அவனது பிடியிலிருந்து நழுவி ஓடி



விட்டது. கணக்கன் ஓடி வந்து ஏழையிடம் குதிரை போய் விட்டதைக் கூறவே ஏழையும் "நான்தான் அதை கவனமாகப் பார்த்துக் கொள்ளச் சொன்னேனே. நீதான் அஜாக்கிரதையாக இருந்து விட்டாய். நீ என்ன செய்வாயோ எனக்குத் தெரியாது. நாளை காலைக்குள் என் குதிரை எனக்குக் கிடைத்தாக வேண்டும்" என்றான்.

அப்போது கணக்கன் "அதை நான் எங்கே போய்த் தேடுவேன்? அதற்கு பதிலாக என்ன கேட்டாலும் கொடுக்கிறேன்" என்றான். ஏழையும் "அப்படியானால் உன் மகளை எனக்குக் கல்யாணம் செய்து வை" என்றான். கணக்கனும் "இது என் மக

ளைக் கேட்டு முடிவு செய்ய வேண்டும். சற்று நேரத்தில் வந்து முடிவு சொல்கிறேன்" என்று கூறிவிட்டுப் போனான்.

கணக்கன் தன் மனைவியுடனும் மகளுடனும் அது பற்றிக் கலந்து யோசித்தான். அவர்களுக்கு அந்த விவாகத்தில் இஷ்டமே இல்லை. ஆனாலும் அந்த ஏழையின் பிடியிலிருந்து தப்பக் கணக்கனின் மனைவி ஒரு யோசனை கூறினாள். அதைக் கணக்கன் ஏற்றான்.

அவள் அந்த ஏழையைக் கண்டு "ஐயா! எங்களுக்கு இந்தத் திருமணம் சம்மதமே. ஆனால் என் மகள் இஷ்டமில்லை என்று முரண்டு பிடிக்கிறாள். அவளை நான் ஒரு சாக்குப் பையில் போட்டுக் கட்டித் தருகிறேன். நீங்கள் இப்போது அதைச் சுமந்து கொண்டு வெகு தூரம் போய் விடிந்ததும் ஏதாவது ஒரு கோவிலில் திருமணம் செய்து கொண்டு விடுங்கள். அதன் பிறகு அவளோடு இங்கே வந்து விடுங்கள்" என்றான்.

ஏழையும் அதற்குச் சம்மதிக்கவே சற்று நேரத்தில் கணக்கனின் மனைவி ஒரு மூட்டையைக் கொண்டு வந்து கொடுத்தாள். ஏழையும் மறுநாள் காலை தான் அழகிய பெண்ணை மணக்கப் போவது பற்றி எண்ணி மகிழ்ந்தவாறே சத்திரத்திலிருந்து மூட்டையைச் சுமந்து கொண்டு கிளம்பினான்.

இரவு முழுவதும் நடந்து காலையானதும் அவன், தான் கண்ட முதல் கோவிலில் மூட்டையை இறக்கி அதன் வாயை அவிழ்த்து "பெண்ணே! வெளியே வா. இங்கு தான் நம் திருமணம்" என்றான். மறுநிமிடம் அந்த சாக்குப் பையிலிருந்து ஒரு பெரிய நாய் வெளி வந்து அவனது மூக்கைக் கடித்து முகத்தைப் பிராண்டி விட்டு ஓடியது.

அவ்வளவு தான்! அவனது ஆசை அத்தோடு முடிந்து விட்டது. அவன் முன் போல் ஊர் ஊராகத் திரிந்து பிச்சை எடுக்கலானான்!



## ஆபத்தான மீன்!

சென்னை நீர்வாழ் இன அருங்காட்சியில் அண்மையில் ஒரு மீனைக் கொண்டு வந்து வைத்தார்கள். இதற்கு வண்ணத்துப் பூச்சி போல இறக்கைகளும் முதுகின் மீது அம்புகள் போன்ற கொண்டைகளும் உள்ளன. இதன் இறக்கைகளால் கடலின் மற்ற உயிரினங்களைத் தன்னருகே வரவிடாமல் பயமுறுத்துகிறது! ரஸல்ஸ் ஸ்கார்பியன் பிஷ்' என்ற இந்த மீனைப் பற்றி 1930லேயே ஒரு புத்தகத்தில் இது விஷம் கொண்டது, முதுகின் இறக்கைகளிலுள்ள முட்களால் எதிரியைக் காயப்படுத்தும் என்றெல்லாம் விவரிக்கப்பட்டிருந்தது. எனவே இதைப் பாம்பு போலக் கருதி பயப்பட்டார்கள். இது கடல் நீரில் மட்டுமே வாழும். அதனால் தினமும் இதன் தொட்டியில் கடல் நீரை விட்டு மாற்றுகிறார்கள்.

## குரைக்கும் மான்!

சென்னையின் வண்டலூர் மிருகக் காட்சி சாலையில் அண்மையில் ஒரு மான் குட்டி பிறந்தது. அழகான, மிரள மிரள விழிக்கும் கண்கள் கொண்ட இதனருகே யாராவது சென்றால் இது நாய் போலக் குரைக்கிறது.

## வெள்ளைக் காக்கை

வெள்ளைக் காக்கையைப் பார்க்க வேண்டுமென்றால் சென்னையில் கிண்டியிலுள்ள சிறுவர் பூங்காவிற்குச் செல்லுங்கள். இளஞ்சிவப்புக் கால்களைக் கொண்டு வெள்ளை நிறத்தில் 90 நாட்களான இக்குஞ்சு காக்கை இனத்தைச் சார்ந்ததே. இது மிகவும் அரிதானது. கோட்டூரில் ஒரு மரத்தின் மீதிருந்த இதனை மற்ற கருப்புக் காக்கைக் குஞ்சுகள் கொத்தித் துரத்தவே யாரோ இதனைக் கண்டுபிடித்து எடுத்து வந்து பூங்காவின் அதிகாரிகளிடம் ஒப்படைத்தாராம்.







Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்



Devidas Kasbekar



B.V. Ravichandran

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ பிப்ரவரி 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600026

---

## டிசம்பர் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | : ஆடி அமைதி பெறும் முதுமை |
| இரண்டாவது போட்டோ | : ஓடி அமைதி பெறா இளமை |
| பரிசு பெற்றவர் | : திரு.அ. சங்கர், கோழிக்கோடு-2. |




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றுர், உறவினர்களுக்கு நீங்கள் அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 117.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ.123.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 264.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

